Tenral

Malar 3, ital 9

October 27, 1956

Record no. 947

# தென்றல்

ஆசிரியர்: கண்ணதாசன்.

உள்நாடு (இலங்கை உட்பட) விலை இரண்டணு. | வெளிநாடு மூன்றணு | அலுவலகம்: 'தென்றல்' சென்னை-6

மலர் 3 | சென்னை | 27—10—56 | சனிக்கிழமை | இதழ் 9


## புரட்சி நடிகரின் நன்கொடைகள்!

நடிகத் தோழர்களின் சேவை, நாட்டுக்குப் பலவகைகளிலும் பயன்படுகிறது. கலையை மட்டும் அல்லாது, நாட்டின் பல்வேறு நிறுவனங்களையும் வளர்க்கும் பெருமை நடிகத் தோழர்களில் பலரைச் சாருகிறது.

கலைவாணர் என். எஸ். கே. அவர்கள், தன் கொடைத் திறனுல் மக்கள் மன்றத்தில் பெருமதிப்புப் பெற்றவர். பிறர் கண்ணீரைக் காணச் சகியாத உள்ளம், அவர் உள்ளம். இல்லையென வருவார்க்கு, இயன்ற மட்டும் தருவது அவர் பழக்கம். பல ஊர்களில், நாடகம் நடத்தி, வசூலையும் தந்துவிட்டு, கைப் பணத்திலும் ஆயிரமோ, இரண்டாயிரமோ கொடுத்துவிட்டு வந்திருக்கிறார்.

அந்த வரிசையிலே இப்பொழுது புரட்சி நடிகர் இராமச்சந்திரன் இடம் பெறுகிறார். புயல் நிவாரண நிதிக்கு அவர் வாரி வழங்கிய தன்மையை நாடறியும். இப்பொழுது மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்கும், தெற்குத் திட்டங்குளத்து ஆதித் திராவிடப் பள்ளிக்கும் சென்னை தியாகராய கல்லூரிக்கும் முறையே ரூ. 1000, 1000, 2500 நன்கொடையாகத் தந்துள்ளார். அதன்றியும், அகில இந்திய பெண்கள் உணவுச் சங்கத்தின் சென்னைக் கிளைக்கு ரூ. 500-ம் தந்துள்ளார்.

வருமானம் அதிகரிக்கலாம்; புகழ் பெருகலாம்; பெரிய மனிதர்கள் கூட்டுறவு ஏற்படலாம். ஆனாலும் தாராள மனது எல்லோர்க்கும் வந்துவிடுவதில்லை. கையிலிருந்து பணம் கொடுப்பது என்றாலே, கண்களில் ரத்தம் கசியும் சிலருக்கு. வந்த பணத்தை, எப்படித் தன் குடும்பத்திற்குச் சொத்தாக்குவது என்றுதான் எல்லோருமே எண்ணமிடுவார்கள். ஒருவர் இன்னொருவரைப் பார்க்கும் போது செய்யும் உபதேசமே, "பணத்தைப் பத்திரமாக வைத்துக் கொள்ளப்பா" என்பது தான். பணம் கைக்கு வந்ததும், மடிக்கு மாறி, பெட்டிக்குள் பதுங்கப் பார்க்கிறது. "நாம் தொல்லைப் படும்போது யார் நமக்குத் தருகிறார்கள்? நமக்கெதற்கு வள்ளன்மை!" என்ற பேச்சுப் புறப்படுகிறது.

"ஐயா பசி!" என்று அலறு பவனைப் பார்த்து, "எல்லார்க்கும் அப்படித்தான்! போ! போ!" என்று இரக்கமின்றிக் கூறத் தோன்றுகிறது. கைப் பணத்திற்கும் தன் பெண்டு பிள்ளைகளுக்குமே தொடர்பு ஏற்படுத்தி, மனம் கணக்கிடுகிறது. பெரும் பகுதி மனித மனம் இப்படி இருப்பதால் தான், ஈந்து சிவக்கும் இரு கரம் படைத்தோரை வாயார வாழ்த்தத் தோன்றுகிறது.

கலைவாணர் என். எஸ். கே., நடிப்புப் புலவர் ராமசாமி, புரட்சி நடிகர் எம். ஜி. ஆர். முதலியோர் நடிகர்களில் வள்ளல்கள் ஆவார்கள்.

★

திராவிட முன்னேற்றக் கழகத்தின் பொதுக் குழுவில், எம். ஜி. ஆர். உறுப்பினர். தீவிரமான கொள்கைகளை உறுதியாகக் கடைப் பிடிப்பவர். லட்சோப லட்சம் மக்களின் இதய கீதம் அவர் பெயர். சமீபத்தில் அவர் நடித்து வெளிவந்த ஐந்து படங்களும் இதுவரை பட உலக வரலாற்றிலே இல்லாத அளவுக்கு வசூலைத் தந்துள்ளன. இப்பொழுது சுமார் பதினைந்து படங்களில் நடித்து வருகிறார்.

இரண்டொரு படங்களில் நடிப்பதாக இருந்து, கொள்கை மாறுபாட்டால் நடிக்க மறுத்ததை நாடறியும். சுமார் இரண்டு லட்சம் ரூபாய்கள் வரை, இதனால் அவர் இழந்தார். அதற்காகத் துளியும் வருந்தியதில்லை அவர். திருச்சியிலும், மதுரையிலும் சமீபத்தில் மதுரைவீரன் 200-வது நாள் விழா நடந்தபோது, அவற்றில் பேசிய எம். ஜி. ஆர்., "எந்த ஒரு காரணத்தைக் கொண்டும் என் கொள்கையை விட்டு நடிக்கமாட்டேன். தயாரிப்பாளர்கள் இருக்கும் இந்த மேடையிலேயே அதை அறுதியிட்டு உறுதியாகக் கூறுகிறேன்" என்றார்.



தான் நடிக்கப் போகும் கதையை, முன்கூட்டியே பரிசீலித்துத்தான் நடிக்கிறார். கதைகளிலே தன் கருத்தை வெளியிட, இரண்டு நடிகர்களுக்குக் கற்பனை ஓட்டம் உண்டு. ஒருவர் கலைவாணர்; மற்றொருவர் புரட்சி நடிகர். இன்றையத் திரை உலகில் தலையாய நடிகர் என்ற பெருமை புரட்சி நடிகருக்குக் கிட்டியுள்ளது. தென் இந்திய நடிகர் சங்கத்தைத் துவக்கி, சிறப்புடன் வளர்க்கும் பெருமை இவருக்கு உண்டு. இவர் பதிப்பாசிரியராக இருந்து நடத்தி வரும் 'நடிகன் குரல்' என்ற மாத இதழ், சுமார் இருபத்து மூவாயிரம் பிரதிகள் செலவழிகிறது. அதில் தன் வாழ்க்கை வரலாற்றை எழுதி வருகிறார்.

தி. மு. கழகத் தலைவர்கள் அனைவரும் இவரிடத்து நல்ல மதிப்பு வைத்திருக்கிறார்கள்.

நடிகர்களில், அழகாகப் பேசக்கூடியவர் இவர். இவர் புகழில் நாம் பெருமைப்பட நியாயம் இருக்கிறது. காரணம், இவர் நம் குடும்பத்துத் திடமான பிள்ளைகளில் ஒருவர்! வாழ்க!

—கண்ணதாசன்.

# சோக காவியம்

இரா. இளஞ்சேரன்

இலண்டன் மாநகரம்......

இருண்ட வட்டாரத்தில் பாழடைந்தாற்போலத் தோற்றமளித்த சின்னஞ்சிறு வீடு. மெழுகுவத்திகளின் மங்கிய ஒளியிலே அவன் எதையோ எழுதிக்கொண்டிருந்தான். எதிரே காகிதங்கள் குவிந்து கிடந்தன. எல்லாமே அவனது எண்ணங்கள்..உணர்ச்சியின் சுழிப்பிலே பிறந்த சித்திரக் கவிதைகள்!

நெஞ்சம் செதில் செதிலாகப் பிய்ந்து போவதுபோல அவன் இருமினன். இருளின் பெய்தலில் அதன் எதிரொலி உறைந்தது. இன்பங்களைக் கொள்ளை கொள்ளையாகப் பரிமாறும் அந்த வசந்தம் அவனை மட்டும் வேதனையின் அதள பாதாளத்திலே தள்ளி வேடிக்கை பார்த்தது! நள்ளிரவு நடனசாலைகளிலே எழுப்பும் இசை-அழகிகளின் பெருஞ்சிரிப்பு-கொடுத்து வைத்தவர்களின் போதை உளறல் எல்லாமே அந்த ஏமாளியைப் படாதபாடு படுத்தின!

நரக வாசலிலே நின்றுகொண்டு 'சொர்க்கமே! வா!' என்று அவன் அழைத்தான்! அந்த ஏதுமில்லாதவனின் இதய எழுச்சிகள் அத்தனையும்-பொன்னுகை மின்னின. இரக்கமற்ற உலகத்திற்காக, தன்னை வசைபேசுவோரின் பரம்பரையினர் படித்து ரசிப்பதற்காக அவன் நிறைய எழுதினன்.

கவிதை.....கவிதை....கவிதை.... உணர்ச்சியின் ஒவ்வொரு துடிப்பிலும் இந்தச் சொல் 'சிரஞ்சீவத்துவம்' பெற்றிருந்தது.

எல்லோரும் உல்லாசத்தின் பூமி தப்பிலே புரண்டபோது அவனது கனவுகள் மட்டும் தணலிலே வெந்தன! நோய்ப் புழுக்கள் அந்த நல்ல இதயத்தை அரித்து வந்தன. ஓயாது இருமுகிறபோது உலகமே தன்னைத் தன்னந்தனியாக விட்டு விட்டு எங்கோ போவதாக அவன் எண்ணுவான்!

எத்தனையோ இரவுகளில், அவனைப் பெற்றெடுத்தவள் தொண்டை வலிக்க இருமியதை அவன் கேட்டிருக்கிருன். அவள் செத்த பிறகுதான் அது ஓய்ந்தது! அடுத்ததாக உடன்பிறந்தானையும் இந்த வியாதி அள்ளி எடுத்துக் கொண்டது! துன்பமயமான சூழல்கள் அவனை விரட்டியடித்தன. எல்லோரையும் கொள்ளை கொடுத்து விட்டுத் தனியாக வாழ்ந்துகொண்டிருந்தான்!

வாழ்க்கையா அது?

சின்னுபின்னமாகிக் கொண்டிருக்கும் அந்த நெஞ்சில் ஆசைமொக்குகள் குவிந்திருந்தன. இருண்ட வாழ்வை, கவிதை ஆர்வம் ஒளிமயமாக உருமாற்றிப் போட்டது! மொழியின் அந்தரங்கங்களை அவன் அறிந்திருந்தான். மொழியும், கலையும், கவிதையும் அவனிடம் புதுச் சுழிப்போடு-பொலிவோடு நிரம்பித் ததும்பின! கவிதைக்கன்னியை இதய நிறைவோடு அவன் வழிபட்டான்.

> "பனிதவழும் மலைமுகடுகள் - வானமளாவிய பசுமரங்கள்-பால் நுரையை ஒழுகவிடும் சிதள நிலவு-மனோகரமான மழைவில்-மணத்தைச் சிறைவைத்திருக்கும் ஆம்பல் இவை எல்லாமே கவிதைப் பெண்ணின் தோழிகள்! மனித உணர்ச்சிகளுக்கு ஆறுதலளிப்பதே அவள் இலட்சியம்!"

இப்படி எழுதினன் அவன். அவன்தான் கீட்ஸ். அழகுணர்ச்சி மிக்க பாடல்களைத் தந்த ஆங்கிலக் கவிஞன். கீட்ஸ் பெரும்புலவனல்ல. வாழ்வில் அலைந்து திரிந்த அனுபவக்களஞ்சியமுமல்ல. விசித்திர விழைவுகளின் நிழலைக்கூட அவன் தொட்டுப் பார்த்தவனல்ல. எனினும் கீட்ஸ் இலட்சியவாதி! ஒரு 'மகா காவியத்திற்கு'த் தேவையான சமாச்சாரங்களைச் சின்னஞ்சிறு இடைவேளையிலே அவன் தொகுத்துக்கொண்டான். உள்ளத்திலே ஒளி இருந்தது; உணர்ச்சிகளிலே வேகம் இருந்தது. சொற்கள் அருவியாயின! 'அழகே உண்மை. உண்மையே அழகு' என்று எடுத்தெறிந்தாற்போல அவன் சொல்லிப் போனதை இன்றைய உலகம் பொன்னிலே பதித்து வைத்திருக்கிறது! கசப்பே உருவான அந்த வாழ்க்கையிலிருந்து இனிமையான கவிதைகள் பிறந்தன! வேதனையில் வார்க்கப்பட்ட நாத தந்திகள் அதிர்ந்தபோது தேனினுமினிய கவிதை வரிகள் வடிவம் பெற்றன. தன்னை வெறுத்து விரட்டும் உலகத்திற்காக அவன் எழுதினன். மனிதனின் ஆசாபாசங்களை அழித்தொழிக்கும் சமூக சம்பிரதாயங்கள் கீட்ஸின் இதயத்தைப் புண்ணுக்கின. கலை ஆர்வம் வயிற்றை நிரப்பவில்லை. முட்டாள்களுக்கு விருந்து படைக்கும் இந்த வகையற்ற உலகம் கவிதை கிறுக்கும் ஒரு அப்பாவியைப் போற்றவா செய்யும்? அவன் எழுதி வெளியிட்ட இரண்டு கவிதைத் தொகுப்புகளுக்கு நாட்டிலே ஆதரவில்லை. மருந்து வாங்கக்கூடப் பயன்படாத அந்த நூற்கள், பதிப்பாளர்களிடம் தேங்கிக்கிடந்தன. விமர்சகர்கள் வேறு எதையெல்லாமோ ஆராய்ந்து கொண்டிருந்தார்கள்!

கீட்ஸ் பத்தொன்பதாம் நூற்றுண்டைய ஆங்கில இலக்கியத்தின் விடிவெள்ளி. எண்ணுயிரத்தி எண்ணூற்றி எண்பத்தொன்பது நாட்களில் வாழ்ந்து மறைந்த அவன், பதினுராயிரத்திற்கு மேற்பட்ட கவிதை வரிகளை எழுதியிருக்கிருன். பைரன் தோன்றி ஏழு வருடங்களுக்குப்பின் பிறந்த கீட்ஸ் பைரன் சாவதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்னரே வாழ்வை முடித்துக்கொண்டான். ஆங்கில மொழி அவனது இதய நெளிவிலே பொங்கி வழிந்து, புதுவண்ணம் பெற்றது. லண்டன் நகரின் புகைமுட்டத்திலே மனோகரமான கவிதைமொக்குகளை வாரியிறைத்துவிட்டுச் சந்தடியில்லாமல் போய்விட்டான்!

பிள்ளைப் பிராயத்திலேயே கீட்ஸ் புத்தகப்புழு. எதையும் ஆர்வத்தோடு வாசிப்பான். ஷேக்ஸ்பியர் கவிதைகளின் உயிரோட்டம் அவனை வெகுவாகக் கவர்ந்தது. எழுதி, எழுதிப் பண்பட்டுப் போன கீட்ஸ், கவிதையின் லட்சணங்களைப் புரிந்துகொண்டான். மொழியிலே அவன் காட்டிய 'சித்திர வேலைப்பாடு' அதுவரை எவரும் செய்யாத ஒன்று.

எண்டிமியான் கீட்ஸின் சிறந்த படைப்பு. அழகுக் கன்னியைத் தேடித்திரியும் இளையோனின் கதை இது. பெண்மையின் பொலிவையே காவியத்தில் திரட்டித் தந்திருக்கிருன். தொட்ட விடமெல்லாம் சுவையூறும் சிருங்காரத் தினைப்பை-அழகின் கரும்புத் தீர்த்தத்தை இளங்கவிஞன் கீட்ஸ் அள்ளி வழங்குகிருன் இதிலே. தந்த கோபுர வாசிகளாகவிமர்சனப் 'பெருமான்கள்' எண்டிமியானைக் கண்டித்து எழுதினர்கள். வாழ்ந்தபோது வசை பேசியஅந்தக் கும்பல் கீட்ஸின் கல்லறையிலே புகழ் பாடக் காத்திருந்தது!

அவன் எழுதியவைகளில் இசபெல்லா குயிலிசை, 'சோகம்' கருணையில்லாத கட்டழகிஆகியவை சிறந்த உயிரோவியங்கள். 'குயிலிசை'யில் கீட்ஸின் எண்ணங்கள் அழகாக எதிரொலிக்கின்றன:

> "கொடுமையே உருவான உலகம் - துயரங்கள் கவிந்த உலகம்! இளமை வயோதிகமாகி விடுகிறது. வேதனையும் விம்முதலும் நிறைந்த மனித வாழ்வில் கவிதையும், இசையும் பிறக்கவா போகின்றன! காலம் தேயத் தேய மனிதனும் சாகிருன்! ஆட்ட பாட்டங்களுக்கு நேரமில்லை. காதலும் அழகும் விநாடியிலே மறைகின்றன. குயிலிசையின் இனிமையில் உயிரையே கொடுத்துவிடலாம். மனிதன் சாவதற்குத்தானே பிறந்தான்!"

'இன்பங்களை ரசித்திட வாழ்வு போதவில்லையோ!' என்ற கூக்குரல் கீட்ஸின் இந்த வரிகளில் தவழ்கின்றது.

'இசபெல்லா' காவியம் இத்தாலியக் கதையொன்றின் தழுவல். அங்நாளைய 'பற்ருக்குறை' அறி[...] வோடு அதீத நிகழ்ச்சிகளைக் கீட்ஸ் இதில் சித்தரித்திருக்கிருன்.

பெண்மையின் எழில் லாவகத்திலே கீட்ஸ் தன்னையே இழந்தான்! அழகிய பெண்கள் அவனிடம் கனவுகளைத் தந்து சென்ருர்கள். புன்னகையும், புதுப்பார்வையும் கொண்ட 'சிங்காரிப்பு பொம்மைகள்' அவனை ஆலவட்டம் சுற்றின. "அழகு! அழகு!" என்று கீட்ஸ் அலைந்தான்! பூனையின் அழகைப் புகழ்ந்துகூட அவன் பாடல்களை எழுதியிருக்கிருன்! பெண்களின் சிரிப்பொலி கேட்டதும் விலகிப் போகும் பண்பு ஏனோ அவனிடம் படிந்திருந்தது.

'பெண்கள் அழகுச் சிற்பங்கள்... மின்னல்கள்......எழில் நிரம்பிய மங்கையை முத்தமிடுவதே பெரும் பேறு!' கீட்ஸின் எண்ணங்கள் இந்தத் தன்மையில் எழில்வட்டம் போட்டன. பைரனைப்போல 'உண்போம்; குடிப்போம்; நாளை இறந்[...] படலாமே!' என்று அவன் 'பழைய வேதம்' பாடவில்லை. அழகியரின் சுவைக்கும்பல் அவனுக்கு வெறும் கனவாகத்தானிருந்தது. கீட்ஸிற்குப் பெண்மையின் சாயல் தவழும் முகம். ஐந்தடி உயரமுள்ள 'பெரிய மனிதன்' அவன். அரையடி கூட அவனுக்கு உயரமிருந்தால் பத்தொன்பதாம் நூற்றுண்டைய ஆங்கில இலக்கிய வரலாறே வேறு விதமாயிருக்கும். வாழ்வின் இயல்பான தொல்லைகளும், தாழ்வு மனப்பான்மையும் நிரம்பிய அந்த நெருப்பு கொப்பளித்த நெஞ்சில்கூள்க்கட [...] விரிந்தன.

ஒரே ஒருத்தி கீட்ஸின் சின்னஞ்சிறு இதயத்தைப் புயலாக்கிவிட்டாள். பதினேழு வயது நிரம்பாத பானிபிரானி கட்டழகி. சிரித்துச் சிரித்து ஆளைச் சாய்க்கும் 'ஊன் மயக்கி'. அழகு இங்கேஇருக்கிறது உண்மையும் கூடவே இருக்கிறது என்று நினைத்தான் கீட்ஸ். விருந்து நிகழ்ச்சியின்போது நண்பன் ஒருவன் அவளைக் கீட்ஸிற்கு அறிமுகம் செய்வித்தான். அவள் அழகி அழகி என்ருல் இளையோர்கள் 'வைத்த விழி வாங்காமல்' பார்க்கும் அழகி; பொன்மேனியும், செவ்விதழும், நீலவிழிகளும் தவம் கிடக்கும் அழகு...

பானி பிரானி கலையைப் பற்றிப் பேசினுள். ரெயினுல்ட்ஸ், பைரன் ஆகியோரின் கவிதைகளைப் புகழ்ந்தாள். அவள் பேசும்போது அவனுக்கு அழகே பேசுவது போலிருந்தது?

கீட்ஸின் வாழ்வில் புதிய ஏடு புரண்டது. பானி பிரானை அவன் காதலித்தான். அதனைப் பெருமிதத்தோடு ஏற்றுக்கொண்டாள் அவளும். சோகமயமான அனுபவங்களில்கூட 'இனிப்பு' தொட்டிருந்தது! கவிதைப் படைப்பில் கீட்ஸ் புதிய சக்தியையே பெற்ருன். கடிதங்களையும், கவிதைகளையும் எழுதி, எழுதி அவன் அவளுக்குச் 'சாகாவரம்' அளித்தான்.

எண்ணற்ற இரவுகளிலே விழித்திருந்து கவிதைகளை எழுதிக் குவித்தான், விடிந்ததும் தன் நெஞ்சம் கவர்ந்தவளுக்குப் படித்துக் காட்ட - அவளுடைய பாராட்டுதலைப் பெற!

தினம் தினம் அவர்கள் சந்தித்தார்கள். ஒருநாள் சந்திக்காவிட்டால் ஆசை ததும்ப, கீட்ஸ் அவளுக்குக் கடித மெழுதுவான். இப்படி முப்பத்தியொன்பது காதல் கடிதங்களை அவன் எழுதினன்.

— 11-ம் பக்க[...]

அடுத்த இதழில்

எஸ். எஸ். தென்னரசு எழுதும்

## "தைமூரின் காதலி"

★ 'சர்வேஸ்வரனின் சவுக்கு' என்று சரித்திராசியர்கள் வர்ணித்தார்கள் அவனை.

★ "சீசர் வீரமும், சாணக்கியன் தந்திரமும் என்றும் பலிக்காது" என்ருள் அவள். முடிவு......?-அந்த வரலாறு இது.



# உரைவரவு பார்த்திருக்கும் நெஞ்சு

மதங்கன், பி. ஏ.

நான் ஒருமுறை ஒரு சிற்றூரில் குடிசை வீடொன்றில் உட்கார்ந்து கொண்டிருந்தேன். மழை பெய்து கொண்டிருந்தது. அப்போது அந்த வீட்டிலுள்ள பாட்டியிடம் இளம்பெண் ஒருத்தி, தான் "இஷ்டப்பட்ட" 'அவரை'ப் பற்றியும், அவர்மேல் விருப்பம் கொண்டதால் தனக்கு வந்த இடைஞ்சல்களைப் பற்றியும் சோகத்தோடு கூறிக்கொண்டிருந்தாள். சாதாரணப் பட்டிக்காட்டுப் பெண் அவள். கூலிவேலை செய்பவள்தான். நான் மழையைக் கவனித்துக் கொண்டிருந்தேன். குடிசையின் எதிரில் ஒரு பெரிய மண்கட்டி கிடந்தது. மழைநீர்ப் பட்டுப் பட்டு அது கரைந்துகொண்டே வந்தது. நான் அதைப் பார்த்தேன். ஆனால் எதுவும் என் மனதில் தோன்றவில்லை. ஆனால் அந்தப் பெண், தன் சோகக் கதையின் முடிவில் அந்தக் கரைந்துவரும் மண்கட்டியைச் சுட்டிக்காட்டி, "நானும் இப்படித்தான், பாட்டி, ஆகிவிட்டேன்; ஒவ்வொருத்தராய் என்மேலே சீறிச் சிறி நானும் கரைந்து கொண்டே போகிறேன்" என்ருள் ஏக்கத்துடன். என்னல் வியப்பை அடக்க முடியவில்லை! ஒரு சிற்றூர்ப் பெண்; படிப்பு வாசனையே அறியாதவள். அவள் அந்தக் கட்டியைப் பார்த்ததும் தன் வாழ்வோடு இணைத்து ஒரு அழகான உவமையையே கூறுகின்ருள். சங்க இலக்கியத்தில் கூட அது போல் ஒரு உவமையைப் படித்ததாக எனக்கு அப்போது நினைவு வந்தது. அந்தக் காட்சியை என்னல் மறக்கவே முடியவில்லை.

அவள் உள்ளத்திலிருந்த காதல், உணர்ச்சியின் மயமான நிலை,—சாதாரணப் பெண்ணைக் கூட இவ்வாறு ஒரு ஒப்புமையைக் கூற வைத்தது. காதல், பல கவிஞர்களை உண்டாக்கியிருக்கின்றது என்பார்கள். காதல் உணர்வு மிகுந்த நிலையில்—காதல் உணர்வு மட்டுமல்ல, துயரமோ, மகிழ்ச்சியோ ஏதோ ஓர் உணர்வு நெஞ்சில் நிறைந்திருக்கும் நிலையில்,பெண், தான் காணும் காட்சிகளில், தன்னுடைய வாழ்க்கையைக் காண்கின்ருள். வாழ்க்கைக்கும் அப்பொருளுக்கும்உள்ளஒப்புவமை அவள். கண்களிலும் நெஞ்சிலும் படுகின்றது. துயர்மிகுந்த மங்கை கருமுகில் மண்டிய வானத்தைக் கண்டு, என் வாழ்வும் இதுபோல இருளடைந்து போயிற்றே என்கின்ருள். பொங்கி விழும் அருவியைக் கண்ட காதலி என் உள்ளத்திலும் இதுபோல் உவகை பொங்கி வழிகின்றது என்கின்ருள். இது பெண்ணின் அடி இதயத்தினின்று எழும் உணர்ச்சிக் கீற்றின் எதிர் ஒளி. தன்னைப் பிற பொருள்களோடு தொடர்புபடுத்திக் கொள்ளும் தன்மை (Associating Tendency) தான் இதற்குக் காரணம்.

இந்தத் தன்மையைக் கவிஞன் பாடலின் மூலமாகக் காட்டும் பொழுது நாம் வியக்கின்ருேம். பெண் உள்ளத்தை அப்படியே எதிரொலித்து விட்டானே என்று போற்றுகின்ருேம்.

முத்தொள்ளாயிரத்தில் இது போன்று ஒரு பெண் உள்ளத்தைப் படம் பிடித்துக் காட்டுகின்ருர் ஆசிரியர்.

குளிர்முத்துக் கொழிக்கும் கொற்கையிலே ஒரு கடற்கரைச் சோலை. தனிமையான இடம். மணல் மேடுகளில் அலைகள் வந்து மோதி மோதித் திரும்புகின்றன. அம் மணல் மேடுகளிற் சில, அலைகளின் மோதுதலுக்கு ஆற்ருமல் சரிந்து விழுந்து கொண்டிருக்கின்றன. 'ஓ' வென்ற பேரிரைச்சல்!

ஓர் இளநங்கை மணல் மேடொன்றில் அமர்ந்து கொண்டு சுழன்றும் முழங்கியும் படர்ந்தும் புரண்டு வருகின்ற கடல் அலைகளையே நோக்கிக் கொண்டிருக்கின்ருள். உள்ளத்தை ஆயிரம் எண்ணங்கள் பொருகின்றன. இதயத்தின் பரப்பு, விழிகளின் நிலைத்த பார்வையிலே மறைந்து கிடக்கின்றது. திடீரென்று ஒரு பேரலை வந்து மோதி, மங்கையின் கால்களை நனைத்துச் செல்கின்றது. அவ்வலையோடு வந்த சங்கம் ஒன்று மணலிற் கிடப்பதை நங்கை காண்கின்ருள். அச்சங்கோ நிறைசூல் கொண்டது. மெல்ல அசைந் தசைந்து பெண்ணின் அருகில் உள்ள மணல் மேட்டில் ஏறுகின்றது. என்ன தான் செய்கின்றது என்று நங்கை உற்று நோக்குகின்ருள். அச்சங்கு அவ்விடத்தே ஒரு முத்தினைக் கருவுயிர்க்கின்றது. பின் மெல்ல அசைந்தசைந்து மணல் விளிம்பின் ஓரத்தே சென்று, கடலினை நோக்கி அமர்ந்து கொள்கின்றது. அதற்கோ தளர்வு மிகுதி. தானகக் கடலுள் இறங்கிச் செல்வது அரிதாக விருக்கின்றது. கடல் அலைகள் மீண்டும் தனைக்கொணர்ந்து வெளியே தள்ளினலும் தள்ளிவிடும். எனவே, அலையோடலையாய் உள்ளே சென்றுவிடுவதற்காக ஒரு பேரலையின் வரவை எதிர்நோக்கிக்கொண்டு காத்திருக்கின்றது அந்தச் சங்கு. மடந்தை இக்காட்சியினைக்காணுகின்ருள். அவள் நெஞ்சிலே சட்டென ஓர் உண்மை புலனுகின்றது. அவள் நிலைக்கும் அந்தச் சங்கின் நிலைக்கும்தான் எவ்வளவு ஒற்றுமை!

ஆம் அவள் கொற்கைவேல் மாறன் மேற் காதல் கொண்ட மங்கை; அவனையே எண்ணி உருகி, அழுதும் கனியும் கசக்கத் துயிலின்றி வாடியவள். அன்று மாலை, அவள் தன் நெஞ்சம், "அவனுக்குச் சொந்தமான கடலையாவது காண்போம்" என்று அவளைக் கடற்கரைக் கிழுத்து வந்தது. அதுமட்டுமா? அவளைக் கடற்கரையிலே அமர்ந்திருக்கச் செய்து விட்டு நெஞ்சம் காதலனிடம், தூது சென்றது. பேதையின் துயரைப் பாண்டியனிடம் எடுத்துரைத்து அவனது அன்பைப் பெறவிழைந்து தூது மேற்கொண்டது அது. சென்ற நெஞ்சம் திரும்பவில்லை; காலம் கழிகின்றது. இந்த நிலையில்தான் முத்தினை மணல் மேட்டிலே ஈன்று வைத்துவிட்டுக் கடலுள்ளே செல்லக் காத்திருக்கும் சங்கைக் காண்கின்ருள் மங்கை. கடற்கரையில் கண்ட இந்த காட்சிக்கும் தன் நிலைக்கும் ஒற்றுமைப் பாட்டினைக் காண்கின்ருள்; எடுத்துரைத்து இரங்குகின்ருள்.

"இந்தச் சங்கினைப் போலத்தானே என் நெஞ்சும் இருக்கின்றது! இது அசைந் தசைந்து வந்து மணல் மேட்டிலே முத்தினை ஈன்றது. என் நெஞ்சும் காதல் தளர்ச்சியால் என்னைக் கடற்கரைக் கழைத்து வந்து மணல் மேட்டில் இருக்க வைத்தது. சங்கு பின் முத்தினை நீங்கி அலை முழங்கும் கடலுக்குட் செல்வதற்காக மணல் மேட்டின் விளிம்பிலே அமர்ந்திருக்கின்றது. ஒருவேளை, 'நான் முத்தினைக் கொணர்ந்து இங்கு வைத்திருக்கின்றேன் கடல் மன்னனே வருக' என அவனை அழைப்பதற்காகத்தான் செல்கிறதோ! என் மனமும் என்னை விட்டுவிட்டுக் கடலொளி போல் ஆரவாரம் வழங்கும் அரண்மனையில் வாழும் பாண்டிய மன்னனை நாடிச் சென்றதே! இன்னும் திரும்பி வரவில்லையே! இந்தச் சங்கு, தானகக் கடலுக்குட் செல்ல அஞ்சி, பெரிய அலை வரட்டும் அதனோடு நாம் சென்றுவிடுவோம் என்று காத்திருக்கின்றது. இது போலத்தான், தனிமையிலே அரண்மனை வாசல்முன் சென்ற என் பேதைமை நெஞ்சும், அவ்விடத்தே நடமாடும் போர் வீரர்களையும், நெருங்கிச் செல்லும் புலவர், பெருமக்கள் பணியாளர் முதலியோரையும் கண்டு, உள்ளே செல்ல அஞ்சி, மன்னனின் உரை-கட்டளைச் சொல்-வரும் வரும் என்று அதனையே எதிர்பார்த்துக் கொண்டு இடக்கின்றதோ? ஆம் ஆம், அப்படித்தான்" என்றெண்ணுகின்ருள்.

இப்போது பாடலைப் பார்ப்போம்.

> " உகுவாய் நிலத்த(து) உயிர் மணல்மேல் ஏறி
> நகுவாய் முத்(து) ஈன்(று) அசைந்த சங்கம்—புகுவான்
> திரைவரவு பார்த்திருக்கும்; தென்கொற்கைக் கோமான்
> உரைவரவு பார்த்திருக்கும் நெஞ்சு".

பெண், கொற்கைக்குரிய குறுவேல் மாறனை எண்ணிக் கிடக்கின்ருள். எனவே அவள் உள்ளம் கடற்கரையைத் தான் நாடுகின்றது. கடற்கரையை பேறும் காண்போம் என்று எண்ணுகிறது.

★

நெஞ்சம் உருவமோ உடலோ, அற்றது. ஆனல் மங்கையோ அதற்கு ஒரு உருவமே (Personality) கொடுத்து விடுகின்ருள். அதனை ஒரு ஆளாக உருவகித்து, அது அரண்மனை வாசலுக்குச் செல்வது போலவும், உள்ளே செல்ல முடியாமல் அரசனிடமிருந்து அழைப்புச் சொல் வருகின்றதா என்று எதிர் பார்த்துத் தயங்கி நிற்பதுபோலவும் கற்பனை செய்கின்ருள். இதில் அவளது உணர்ச்சியின் கூர்மை புலனுகின்றது. நெஞ்சில் மோதும் ஆசைகளும், காதல் வேகமும், சிந்தனை ஓட்டமும் அத்தனையும் சேர்ந்து உள்ளத்தை ஒரு திண்ணிய, (solid) உயிர் ஓட்டம் ததும்பும் ஒரு பொருளாகவே ஆக்கிவிட்டன. ஆவி (spirit) நிலையிலேயே அது இல்லை. சாதாரண நிலையில் இந்த மாற்றம் பிறப்பதில்லை. சாதாரணமாக, நெஞ்சு, எண்ணங்களைத் தோற்றுவிக்கும் ஒரு நிலைக் களன், ஒரு கருவி, அவ்வளவுதான். ஒரு பெண்ணின் எண்ணம் அவள் மனத்தின் எண்ணம். இங்கோ, மங்கைக்கென்று ஒரு எண்ணம் இல்லை. அவள் மன்னன் மார்பிலே அணியப் படற்காகக் காத்திருக்கும் ஒரு முத்து; அவ்வளவுதான். அவளுடைய நெஞ்சுக்குத்தான் எண்ணங்களும், செயலும் காதலும் சொந்தம். அவள் அல்ல, அவளது நெஞ்சுதான் அரண்மனை வாசலிலே சென்று உள் நுழையக் கட்டளை வேண்டி நிற்கின்றது.

இவ்வாறு உள்ளத்தைப் பெரிதாகக் கொண்ட ஒரு சிறந்த காதலை ஆசிரியர் காட்டுகின்ருர்.

உடலில் நெஞ்சு உறைவது இயற்கை. இங்கோ நெஞ்சில் தான் உடல் வாழ்கின்றது. எனவேதான், சங்கம் நெஞ்சமாகவும் அது ஈன்ற முத்தம் உடலாகவும் மங்கையின் கற்பனை உருவகம் செய்கின்றது.

'பெண் உள்ளத்தின் ஆழத்தை அறிய முடியாது' என்ற கூற்றை எதிர்த்துச் சவால் விடுக்கின்றது இந்தப் பாடல்.

# நாங்களும் நீங்களும்

**தோழரீர்**

இந்த இதழ்க் காகிதத்தைப் பார்க்கும்போதே உங்கள் மனது ஏதோ நினைக்கிறது என்று எங்களுக்குப் படுகிறது. இந்தியாவில் தயாரிக்கும் 'நேப்பா' நியூஸ் பிரிண்டில் தயாரித்துப் பார்க்கலாம் என்று விரும்பியதினுல் ஏற்பட்டகுறையை நாங்கள் உணர்கிறேம். இனி இவ்வாறு நேராது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேம்.

13-10-56 ம் தேதிய இதழில் வெளியான 'கோழை' என்ற கட்டுரையைப் பாராட்டி ஏராளமான பாராட்டுக் கடிதங்கள் வந்துள்ளன. அவைகளில், மனதை உருக்கும் சோகக் கதைகளும் இருக்கின்றன. ஒரு கடிதத்தை இங்கே வெளியிட்டிருக்கிறேம். கடிதம்தான் அது. துன்பக்கதையாகவே தெரிகிறது. இத்தகைய கடிதங்கள்-உண்மைச் சம்பவத்தையொட்டிய கடிதங்கள் அடுத்தடுத்துப் பிரசுரிக்கப்படும்:

"அன்புமிக்க அண்ணு கவிஞர் கண்ணதாசன் அவர்கட்கு முன்பின் பார்த்தறியா, முகம் தெரியா 'தென்றல்' இரசிகனெருவன் மிக்க வணக்கத்துடன் வரையும் சில வரிகள்.

அண்ணு ! 13-10-56 அன்று வீசிய தங்களின் 'தென்றலி'ல் ஒரு "கோழை" மிதந்து வந்தான். என்னென்னவோ பேசினுன். அவனைப் பற்றிய சில சந்தேகங்களைக் கேட்கத்தான் இம்மடலைத் தங்களுக்கு வரைகிறேன், அந்தக் 'கோழை' பின்பற்றிய முறையையே நானும் பின்பற்ற வேண்டியிருப்பதால்!

அன்பு அண்ணு ! பலருக்குப் பல தொல்லைகள் இருக்கலாம். அந்தத் தொல்லைகள் காரணமாய் அவர்கள் 'கோழை'யாக மாறி, தற்கொலையை நாடலாம். ஆனல், எனக்கு ஏற்பட்டிருக்கும் தொல்லையோ சாதாரணமானதல்ல. இவ்விடத்தில் சிறிது என் கடந்த வாழ்க்கையை விளக்க வேண்டும். தங்களின் பொன்னுன நேரம் கொஞ்சம் வீணுகலாம். ஆயினும் ஒரு 'கோழைக்'காகச் சிறிதுநேரத்தை ஒதுக்கி மேலே படியுங்கள்.

அண்ணு ! எனக்குப் 'பாலூட்டி, சீராட்டி' தொட்டிலிலே போட்டு ஆராரோ பாடிய தாய் மறைந்து, ஆண்டுகள் பத்து பறந்துவிட்டன. தந்தையாரோ, மறுமணம் செய்துக் கொண்டு வாழ்ந்துகொண்டிருக்கிருர். இந்நிலையில் எனக்குச் சென்ற ஆண்டு மணம் நடத்தினர் மட்டில்லா மகிழ்வடைந்தேன். அதுவரையில் வாழ்வில் ஒரு சுவையும் கண்டறியாத நான் மணம் நடந்த நாளிலிருந்து, வாழ்வில் சுவையை மட்டுமல்ல - ஈடில்லா இன்பத்தையும் அனுபவித்தேன். என் துணைவியின்வருகை,-மறைந்த என் அன்னை மறுபடியும் என்னிடமே வந்துவிட்டாள் என்று எண்ணச் செய்தது. அண்ணு ! நாங்கள் ஒன்ருக வாழ்ந்த அந்த ஒன்றரை மாத வாழ்வை - வாழ்வின் இன்பத்தை வரைய எனக்கு வார்த்தைகள் கிடைக்கவில்லை. ஆம் அண்ணு ! அந்த ஒன்றரை மாதம் தான் எனக்கு வாழ்வின் சுவையை அறியும் பேறு கிடைத்தது. அதற்குள் என் விடுமுறை முடியவே, பிரியா விடைபெற்றுப் பிரிந்தேன். என் கண்மணி கண்களில் நீர் ஆறெனப்பாய நிலைகலங்கி நின்று கொண்டிருந்தாள், வண்டி கண்களுக்கு மறையும்வரை. அதுதான்ண்ணு, நான் கடைசியாக அவளைப் பார்த்தது. பாவி நான், அதற்குப்பின் அவள் முகத்தைப் பார்க்கக்கூட முடியாதவனுகிவிட்டேன், என்னையே நான் அழித்துக் கொண்டதால்.

அண்ணு ! இனி வரையப்போவது தான் முக்கியமானது. கவனமாகப் படியுங்கள்.

விடுமுறை முடிந்து எங்கள் 'கம்பெனி' - உள்ள நேபாளத்திற்குச் சென்றேன். அங்கிருந்து 'இலக்னே' (Lucknow) மாற்றிவிட்டனர். நானும், 'இலக்னே' சென்ருல், மனைவியோடு வாழச் சந்தர்ப்பம் கிடைக்கலாம் என்ற ஆசையில் அங்கு சென்றுவிட்டேன். என் கம்பெனியிலுள்ள பெரிய "ஆபீசர்" களும்-(Family Quarter) தருவதாக வாக்குக் கொடுத்து என்னை அனுப்பினுர்கள்.

அண்ணு ! என் துணைப்பறவையிடமிருந்து தூது மடல்கள் வாரத்தில் நான்கு வரும். நான் தினமும் ஒரு மடல் வரைந்துகொண்டிருப்பேன். இப்படிச் சில நாட்கள் கழிய, நான் ஒரு விண்ணப்பம் வரைந்தேன் எங்கள் 'அட்ஜுடண்ட்'டுக்கு. (Adjutant) அவர், "உனக்கு (Family Quarter) கொடுக்க இயலாது" என வரைந்துவிட்டார். எப்படி இருக்கும் என் மனம் ? இதுதான் இப்படியென்ருல், என் இன்பமும் திடீரென்று ஒரு மடலில், "அத்தான் ! இனிமேல் தாங்கள் எனக்கு மடல் வரையவேண்டாம். நானும் எழுத மாட்டேன்" - என்று வரைந்துவிட்டாள். ஏமாற்றத்தின்மேல் ஏமாற்றம் என்மனம் உடைந்துவிட்டது. அண்ணு ! ஆர்வமுடன் அவள் மடலை எதிர்பார்க்கும் எனக்கு அவளின் அந்தக் கடிதம் என் மனதை என்ன பாடு படுத்தியிருக்கும் என்பதை யோசித்துக்கொள்ளுங்கள். அண்ணு ! தான் அவ்வாறு வரைந்ததற்குச் சரியான காரணம் எதுவும் காண்பிக்கவில்லை. இந்த ஆத்திரத்தில், ஒரு தவறு செய்துவிட்டேனண்ணு! அந்த ஒரு தவறு என் வாழ்வையே அழித்துவிட்டது, அண்ணு ! உடனே நான், "பட்டு! உன் மடல் வெகு நன்ருக உள்ளது. சரி ! எனக்கு மடல் வரையாமல் வேறு எந்தக் காதலனுக்கு வரையப் போகிருய் ? ஊரில் காதலன் எவனுகிலும் உள்ளானு ?" என்று வரைந்துவிட்டேனண்ணு ! இப்படி வரைந்தாலாகிலும் இனிமேல் பயந்துகொண்டு அடிக்கடி மடல் வரைவாள், கண்மணியின் கையெழுத்தைத் தினமும் பார்க்கலாமே, என்னும் ஒரு பேராசையால் எழுதிவிட்டேனண்ணு அவ்வாறு. அவ்வளவுதான். அடுத்த பத்து நாட்கள் ஒன்றும் இல்லை. பதினேருவது நாள் காலையில் தந்தி வந்தது. மனைவி மறைந்தாள் என்ற தாங்கொணு இடியைத் தாங்கிக் கொண்டு. உலகமே சுற்றுவது போலிருந்தது எனக்கு: பைத்தியம் பிடித்துவிட்டது என்று நண்பர்கள் சொல்லுமளவுக்கு ஆகிவிட்டேன். இந்திய அரசாங்கத்தின் நிர்வாகத்தைப் பாருங்கள். தந்தி வந்த ஏழாவது நாள்தான் விடுமுறை கிடைத்தது. நான்கு நாள் பிரயாணத்தையும் முடித்து வீட்டுக்கு வந்தால்-அண்ணு ! எழுதவே கை கூசுகிறது அண்ணு ! என் கடிதம் காரணமாய் என் கண்மணி தற்கொலை செய்துகொண்டாளாம். இந்தச் செய்தி என் உள்ளத்தை உலுக்கியது. முதலிலேயே வெறிபிடித்தவன் நிலை. இந்நிலையில் மண்வெட்டியைத் தூக்கிக்கொண்டு சுடுகாடு நோக்கி ஓடினேன்.

'என் இதயஅரசி புதைந்த இடத்தில் நானும் புதைந்துவிடுகிறேன். என் அன்புமலர் கருகி, மண்ணுக மாறிவிட்ட இடத்தில் நானும் மண்ணுகிறேன்' என்று கத்திக் கொண்டே ஓடினேன். மக்கள் - ஆம் உறவினர்-விடவில்லை. பிடித்துக்கொண்டனர்.

"பாவி ! ஒரு குலக்கொடியைக் கொன்றுவிட்டாயே" - என்கிறது சமூகம். "கொலைகாரா ! உனக்கு என்னடா தீங்குசெய்தாள் அம்மங்கையர்திலகம் ? அணைத்துவிட்டாயேடா குடும்பவிளக்கை" - மனச்சாட்சி ஓலமிடுகிறது. "பெண்களுக்கு உயர்வு தரவேண்டும். தாய்க்குலம் ஆணின் பூசைக்குரிய குலம் - மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்...எங்கேடா இவைகளெல்லாம் காற்றில் பறந்துவிட்டதா ?" கொள்கை கொக்கரிக்கிறது கோபத்தோடு. எங்கு திரும்பினுலும் "கொலைஞன்", 'கொலைகாரன்' என்னும் சொற்கள் - ஏச்சுக்கள்! இந்நிலையில் என் மைத்துனரோ, என்னை, அவர்தம் பழைய அன்பு மாருமல் "என் தங்கை போனுள் போகிருள். மைத்துனரே ! நீர் இருந்தால் போதும்" என்கிருர்.

அண்ணு ! கண்ணுடி 'என்னை' வாலிபன், வயது 25 தான் ஆகிறது. கள்ளமில்லாத உள்ளத்தான் என்றெல்லாம் சொல்லுகிறது. உலகமோ "இல்லை-அவன் கொலைஞன்-ஒரு உத்தமியைக் கொன்ற ஊதாரி-அவன் தாயினத்துக்கு ஒரு அபாய அறிவிப்பு"-என்கிறது. இவ்வளவு பாரத்தை மனத்தில் ஏற்றிக் கொண்டும் இன்னும் என் மனையாளின் மதிமுகம் மறக்காமல், சதா அவள் நினைவாகவே காலம் கடத்தி வருகிறேன்.

அண்ணு ! இப்பொழுது சொல்லுங்கள் நான் 'கோழை'யாவது தவரு ? கூடாதா ? நானே வாழ்க்கையைப் பற்றி வண்ணக்கோட்டைகள் பல கட்டியவன், கருங்கல் கோட்டைதான் என்று எண்ணியிருந்தேன். ஆனல், நானே அணுகுண்டு வைத்துத் தகர்த்துவிட்டேன். இனி எனக்கு வாழ்வுதான் ஏது ? நிம்மதிதான் ஏது ? "குற்றம் புரிந்தவன் வாழ்க்கையில் நிம்மதி கொள்ள முடியுமா ?"

அண்ணு ! என் முடிவு இதுதான் ! இன்னும் இரண்டாண்டுகள் நான் கண்டிப்பாய் வாழ வேண்டிய-அல்ல அல்ல - நடைப்பிணமாய் உலவ வேண்டிய கடமைகள் சில குறுக்கிடுகின்றன. அதற்குமேல் 'கோழை'யாக வேண்டியதுதான். மனச்சாட்சியே எனக்கும் பகையாக மாறிவிட்டபின் நான் வாழ்வதெங்ஙனம் ? இம்முடிவைத் தாங்கள் எப்படியாகிலும் சொல்லுங்கள். கொலைஞன் என்னும் 'பட்டப்' பெயரை காதால் கேட்டுக் கொண்டிருப்பதைவிட - தற்கொலை செய்துகொண்டு 'கோழை'யாக மாறுவது எவ்வளவோ மேல் என எண்ணுகிறேன்.

அண்ணு ! முடியுமானுல், இந்த ஆதரவற்றவனுக்காகக் கொஞ்ச நேரம் ஒதுக்கி ஒரு பதில் வரைவீர்களானுல் என் மனம் சிறிது 'சாந்தி' அடையும்.

இங்ஙனம்,

தங்கள் பல்லாயிரக்கணக்கான 'தென்றல்' வாசகர்களில் ஒருவன்.

---

தோழர்களே,

தேர்தல் முடியும் வரை கூட்டங்களுக்குத் தேதி கேட்காதீர்கள். நான் சில முக்கிய ஊர்களில் தங்க வேண்டியிருக்கிறது.

கண்ணதாசன்.

---



---

## போலிப் புத்தக வியாபாரிமீது கலைஞர் மு. க. வழக்கு

கலைஞர் மு கருணநிதி பால் எழுதப்பட்டு 'முரசொலி' இதழில் வெளியான 'அனுர்கலி' 'தாய்மை' என்ற கதைகளை அனுமதியில்லாமல் புத்தகமாக வெளியிட்டதாக கலைஞர் மு. க. புகார் செய்ததன்பேரில், இராயப்பேட்டையைச் சேர்ந்த கே. ஆர். நாராயணன் என்பவர் கைது செய்யப்பட்டார்.

அந்தப் புத்தகங்கள் விற்கப்பட்ட இடங்களில் போலீசார் சோதனையிட்டு புத்தகங்களைக் கைப்பற்றினுர்கள்.

கைது செய்யப்பட்ட நாராயணன் ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டிருக்கிருர். அவர்மீது ஒரு வழக்குப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது.



"போற்றுபவர் போற்றட்டும் புழுதி வாரித்
தூற்றுபவர் தூற்றட்டும் ; தொடர்ந்து செல்வேன்
ஏற்றதோரு கருத்தை என(து) உள்ளம் என்ருல்
எடுத்துரைப்பேன் எவர்வரினும் நில்லேன் : அஞ்சேன் !"

# எண்ணம்

மலர் 3 ‖ 27—10—56 ‖ இதழ் 9

## தேர்தலும் தி. மு. கழகமும்

**12-10-56** அன்று, தன் பயணத்தைத் துவக்கிய தி. மு. கழக தேர்தல் ஆய்வுக்குழு, 24 10-56 காலையில் சென்னை வந்து சேர்ந்தது. குழு, சென்றவிடங்களிலெல்லாம் மக்கள் காட்டிய பேராதரவு மறக்க முடியாதது. புதிய தெம்பும் திராணியும் உற்சாகமும் எங்கும் காணப்பட்டன. சுற்றுப்பயண அலுப்போடும் 21-உயன்று காரைக்குடிக்கு வந்த குழு, அந்நிலையிலும் மிகுந்த உற்சாகத்தோடு காணப்பட்ட தென்ருல், மக்கள் தந்த மகத்தான ஆதரவுதான் காரணம்.

அரசியல் வரலாற்றிலே புதிய திருப்பத்தை, வரும் பொதுத் தேர்தல் ஏற்படுத்த இருக்கிறது. இன்ன தொகுதியில் இன்னுர் வந்துவிடுவார்கள் என்று உறுதியாக நம்பிக் கணக்கிடும் காங்கிரசுக்கட்சி, வரும் தேர்தலில்தான் மாறுபட்ட நிலையைக் காணப்போகிறது. தி.மு. கழகம், கம்யூனிஸ்டுக் கட்சி, பி. சோ. கட்சி, முஸ்லிம் லீக் முதலியன காங்கிரசை எதிர்த்துப் போட்டியிடப் போகின்றன. இவை அனைத்தும் ஒன்ருகச் சேர்ந்து போட்டியிடாவிட்டாலும் தனித் தனியாகப் போட்டி யிடுவதே காங்கிரசுக்கு அதிர்ச்சியைத் தரக்கூடியதுதான். குறிப்பாக தி. மு. கழகம் போட்டியிடுவதுதான் அந்த வட்டாரத்தில் கிலியை உண்டுபண்ணியிருக்கிறது. மற்றக் கட்சிகள் ஏற்கனவே காங்கிரசை எதிர்த்துப் போட்டியிட்டவைதான். அதனுல் அவற்றைப் பற்றி, அதிகமாகச் சிந்திக்க வேண்டிய அவசியம் காங்கிரசுக்கு இருப்பதாகத் தெரியவில்லை. புதுக் காளை மஞ்சிவிரட்டுக்கு வந்திருப்பதால், அது எப்படிப்பட்டதோ என்ற பயம், அரசியலில் தொழில் நடத்திவந்த காங்கிரசுக்கு ஏற்பட்டிருக்கிறது.

நம்மைப் பொறுத்தவரையில், மிகவும் மகிழ்ச்சியோடும் நம்பிக்கையோடும் துணிவோடும் வரும் பொதுத் தேர்தலை எதிர்பார்க்கிறேம். பணமில்லை நம்மிடம்; விளம்பரப்படுத்த பெரிய தினசரிகள் இல்லை நம்மிடம் ; ஆனுல் தைரியமும் விடாமுயற்சியும் ஆள் கட்டும் ஏராளம் ! ஏராளம் !

மற்றவர்கள் சம்பளம் கொடுத்து ஆள் பிடிக்க வேண்டியிருக்கும் ; பணங் கொடுத்து ஓட்டு வாங்க வேண்டியிருக்கும். நமக்கு அந்தத் தொல்லைகள் இல்லை. உள்ளதைச் சொல்வோம்; கிடைத்ததைப் பெறுவோம்—அதுவே வெற்றிகரமாக அமையும். மாநில மாநாட்டில் தோழர் சம்பத் அவர்கள் குறிப்பிட்டதுபோல், நமது பேச்சு இருதயத்திலிருந்து வருகிறது, அதில் உண்மை ஏறியிருக்கிறது. நாம் எப்பொழுதும் எதையும் எக்காரணத்தை முன்னிட்டும், மறைத்தோ மாற்றியோ பேசியதில்லை. நமது கொள்கைகள் நாட்டு நலத்தை முன்னிட்டே தவிர, நமது சொந்த லாபத்துக்கல்ல. ஆகவே தான் சாதாரண காலத்தில் ஒரு பேச்சு, தேர்தலுக்கெனத் தனிப் பேச்சு நம்மிடம் இல்லை. எப்பொழுதும் சொன்னதைத்தான் இப்பொழுதும் சொல்வோம். இந்த நல்லெண்ணத்தையும் நேர்மையையும் நாடு நன்ருக உணர்ந்து கொண்டிருக்கிறது. ஆகவேதான் வருந் தேர்தலில் நமக்கு நம்பிக்கை யிருக்கிறது.

காமராசர் மின்னல் வேகத்தில் காரியங்களைச் செய்து வருகிருர். எந்தத் தொகுதியில் யாரிடமிருந்து நிறையக் கறக்கமுடியும் என்பதைக் குறிப்பாகக் கணக்கிடுகிருர். பல பேர், ரயிலுக்கு டிக்கட் வாங்குவது போல், காங்கிரசு டிக்கட் வாங்க முயற்சிக்கிருர்கள். கிடைக்கவில்லை யென்ருல் சுயேச்சையாக டிக்கட் அடிக்கப் போகிருர்கள். இதிலிருந்தே காங்கிரசுக் கட்சி எந்தக் கொள்கை அடிப்படையில் தேர்தலுக்கு நிற்கப்போகிறது என்பதை நாம் புரிந்துகொள்ள முடியும். அதையே மக்களுக்குச் சொல்லவும் முடியும். காங்கிரசுக் கட்சிக்கு, தேர்தல், வியாபாரமே தவிர, கொள்கையைச் செயல்படுத்தும் சனநாயக முறையல்ல. கொள்கை ஒன்றினை மூலமாகக் கொண்டு, அதனை நிறைவேற்ற வல்லாரை உறுப்பினராக நிறுத்தி, திட்டவட்ட மானதொரு அமைப்பாக சட்டசபைக் கட்சியை உருவாக்குவதுதான் யோக்கியமான கட்சிகளின் வேலையாகும். தில்லுமுல்லும் திருகுதாளமும் ஒரு நாட்டு மக்கள் தொகையையே பணயமாக வைத்து நடத்தும் சுயவாழ்வுச் சூதாட்டமும் காங்கிரசுக் கட்சியின் அடிப்படைக் கொள்கைகளைத் தின்றுவிட்டு, முழுக்க முழுக்க மேலே வந்துவிட்டன. அதனுல் எந்த யோக்கியதையும் இல்லாது வாடகைக்கு விடப்படும் நிறுவனமாக காங்கிரசுக் கட்சி மாறிவிட்டது. அரசாங்கம் அரைகுறையாகச் செய்து முடித்த மிகமிகச் சாதாரணமான காரியங்கள்தான் காங்கிரசுக் கட்சியின் கொள்கை முழக்கத்திற்கு இன்று பயன்படுகின்றன. இதுவரை வேறு அரசியல் நிறுவனங்கள் பதவியிலிருந்திருந்தால், சுலபத்திலேயே காங்கிரசு அரசாங்கம் செய்ததைவிடப் பல நல்ல காரியங்களைச் செய்திருக்க முடியும்.

ஆனுல் பரிதாபகரமாக பத்து ஆண்டுகள் காங்கிரசுக் கட்சி பதவியிலிருந்தும் நாட்டு மக்களின் நலிவு தீர்க்கக்கூடிய நல்ல காரியங்களைச் செய்யவில்லை. பழக்கப்பட்ட அதிகாரிகள் செய்த காரியங்கள்தான் அரசாங்கக் காரியங்களாக ஆளும் கட்சியினரால் முழங்கப்படுகின்றன. கட்சியிலிருந்தும் ஒழுங்கான வேலைத் திட்டம் இல்லை என்கின்றபோது, "கட்சி என்னத்தைச் சாதித்துவிடப் போகிறது ?" என்பதுதான் நாட்டு மக்களின் கேள்வி. நாம் மேலே குறிப்பிட்டதுபோல் காங்கிரசுக் கட்சி, முழுக்கத் தொழில் நிறுவனமே தவிர அரசியல் நிறுவனமல்ல. பெண் நல்ல பெண்ணுக இருந்தால்தான் சுயம்வரத்திற்கு மாப்பிள்ளைகள் கூடுவார்கள். இல்லையென்ருல்—பெண் ஒழுக்கம் கெட்ட பெண்ணுக இருந்தால் அந்தப் பெண்ணையே கொண்டுபோய் வீட்டுக்கு வீடு மாப்பிள்ளை இருக்கிருனு என்று தேட வேண்டியிருக்கும். ஒழுக்கம் பழுதுபட்டுப் போன காங்கிரசுக் கட்சி தேர்தலுக்கு மாப்பிள்ளை பிடிக்கும் வேலையில் ஈடுபட்டிருக்கிறது.

எதிர்த்துப் பேச, அந்தக் கட்சியின் ஓட்டை உடைசல்களை எடுத்து விளாச நமக்கு ஏராளமான வாய்ப்பு வசதிகள் உண்டு. நல்ல முறையில் செயலாற்றவும் நம்மால் முடியும். கண்ணையும் கருத்தையும் மூடிக்கொண்டு காமராசரை ஆதரிக்கும் பெரியார் ராமசாமி கூட காங்கிரசுக் கட்சியைப் பாராட்டவில்லை காமராசரைப் பாராட்டுவதும், அவரே மீண்டும் பதவிக்கு வர வேண்டும் என்று பெரியார் விரும்புவதும், காமராசரின் திறமைக்காகவோ, யோக்கியதைக்காகவோ அல்ல. அவர் இவருக்கு வேண்டியவர் ! அவ்வளவுதான் !

அதனுல் தேர்தலில் போட்டியிடப் போகும் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு மிகவும் பக்குவமான சூழ்நிலையே அமைந்திருக்கிறது. எதிர்த் தாக்குதல்கள் பலமாக இருக்கலாம். என்ருலும், மக்கள் மன்றத்தில் அடிபட்டுப்போன, செல்வாக் கிழந்த, சிந்துவாரற்ற, திறமையில்லாத, நாணயங் கெட்ட, நடத்தை தவறிய, தகரக் குவளைகளின் எதிர்ப்பாக அது இருக்குமே தவிர மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களின் எதிர்ப்பாக அது இருக்காது கவிதைகளுக்கு உணர்ச்சி கொடுத்துவிட்டு தன் உணர்ச்சிகளை இழந்துவிட்ட புரட்சிக் கவிஞர் பாரதிதாசனே, நல்லெண்ணத்தி லிருந்து விடுபட்டுவிட்ட பெரியார் இராமசாமியோ வக்கு வகையில்லாத அவரது சீடர்களோ, தொழில் நடத்தும் காங்கிரசு உறுப்பினர்களோ, அடியாட்களோ, ஆர்ப்பாட்டக்காரர்களோ மேடை ஏறியும் பின்புறம் நின்றும் தாக்குவதாலே நமது பணிச் சிறப்பு அணுவளவும் குறைந்து விடும் என்று நாம் அஞ்சத் தேவையில்லை. அறிஞர் அண்ணு அவர்களோடு பேசிக் கொண்டிருந்த நேரத்தில் அவர்கள் ஒன்று குறிப்பிட்டார்கள் : "கேவலமான தாக்குதல்களாலே ஒரு கட்சியின் தரமோ, வலுவோ குறைந்துவிடுமென்ருல் அந்தக் கட்சி வளர்ந்ததே தவறு. அது அழிந்துதான் ஆகவேண்டும். ஆனுல் அப்படியல்லாது தாக்குதல் பெருகப் பெருக, கட்சியும் வளருமானுல், தாக்குபவன் யோக்கியதை யற்றவன் என்பது நிரூபணமாகிவிடும். அவன் மகள் மன்றத்தில் தேடுவார் இல்லாமல் போய்விடுவான். ஒரு சுவரைக் கையாலே ஒருவன் குத்தும்போது அந்தச் சுவர் 'பொலபொல' வென்று உதிர ஆரம்பித்துவிட்டால் அது 'போலி' என்றுதானே பொருள்? அல்லாமல், குத்துபவன் கை வலிக்க ஆரம்பித்தால் குத்துபவன் சோணங்கி; சுவர் வலிமையுடையது என்பதுதானே பொருள் !"- இதை நாம் நன்ருக மனதிலிருத்திக் கொள்ளவேண்டும். பண்பட்ட உள்ளம் படைத்த அறிஞர் அண்ணு அவர்கள் எதையும் மிக எச்சரிக்கையோடு கவனிப்பார்கள். எந்த நேரத்தில் எதைச் செய்யவேண்டும் என்பதை நன்ருக அறிந்தவர்கள். கட்சியோ, கட்சியிலுள்ள ஒரு கொள்கையோ, இல்லை ஒரு தொண்டனே, சிறிதளவு 'போலி' யாயிருந்தாலும் களைந்தெறியக் கூடிய தெம்பு படைத்தவர்கள். முன்னேற்றக் கழகத்தின் உறுதிப்பாட்டிலே அவர்களுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிறது, நமக்கிருப்பது போலவே. ஆகவே, அப்பன் பேர் கேட்பவர்கள், அபத்தங்களைக் கொட்டுபவர்கள், வெறிபிடித்தவர்கள், விவர, விளக்கம் அறியாதவர்கள் பேச்சுக்களை நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை.

பெரிய பெரிய பண முதலைகளைக் கூட எதிர்த்து, உறுதியாகப் போட்டி போட நம்மால் முடியும். நம்மை யாரும் விலைக்கு வாங்க முடியாது. நமது கொள்கைகளை அணுவளவும் சிதைக்க முடியாது. தேர்தலிலே தொழில் நடத்தி நம்மைத் தோற்கடித்து விட்டாலும் கூட, நமது கட்டுப்பாட்டையும் ஒற்றுமையையும் பிளவு படுத்திவிட முடியாது. காரணம், தேர்தல் நமது அடிப்படைக் கொள்கையல்ல, அது திராவிட நாட்டுப் பிரச்சினை. அதற்குப் போகும் வழியைப் பக்குவப்படுத்த இதைப் பயன்படுத்துகிறேம். பயன்பட்டால் சரி; இல்லையேல் அடுத்த வழி ! நடப்போம் ! நடப்போம் ! நடந்து கொண்டே யிருப்போம் ! திராவிட நாட்டு எல்லையைத் தொடும்வரை நமது கால்களுக்கு ஓய்வில்லை ! உள்ளத்திற்குச் சலிப்பில்லை. நாம் கண் மூடிவிட்டாலும் அடுத்த பரம்பரை அதைத் தொடரும்.

வாழ்க திராவிடம் !

வாழிய தமிழ் !

—கண்ணதாசன்.

---

தேர்தல் வருகிறது ; தெரிந்துகொள்ளுங்கள்:

# 4. எஸ். எஸ். ராமசாமி

''தேர்தலுக்கு முன்னால்நான் செப்பியது ஒன்று;
செயித்துவந்த பின்னாலே செய்ததுவே றொன்று !
ஆர்தடுத்தார் எனே!மக்கள் ஆட்டுமந்தைக் கூட்டம் !
அடிப்பவர்கள் அடித்தாலே எடுத்துவிடும் ஓட்டம் !
போர்தொடுத்தார் கழகத்தார்; பலன்என்ன ஆச்சு !
'புஸ்'வாணம் விட்டதுபோல் புகையாகிப் போச்சு !
கூர்மழுங்கா ஆயுதத்தைக் குறிவைத்து விட்டேன் !
கூசாமல் மந்திரியெ னும்பெயரைப் பெற்றேன் !

சிங்காத னத்திலிலே சிங்கங்கள் மட்டும்
சேர்ந்திருக்க வேண்டுமெனச் செய்தார்கள் சட்டம்
இங்காத னத்தினிலே இந்தப்பொழுதிந்த என்னை
ஏற்றிவைத்து விட்டார்கள் ! ஏசுவதேன் பின்னே !
தங்காத பதவிஇது; என்றாலும் புத்தி
தடுமாறும் என்போல்வார் பெறுகின்ற சக்தி !
மங்காது மறையாது மறுபடியும் பெறுவேன் !
வருகின்ற தேர்தலிலும் செயித்துத்தான் வருவேன் !

நீதிமுறை அணுவேனும் நினையாத போதும்
நெறியான மூளைஎனக் கில்லாத போதும்
சாதியெனும் ஒன்றைத்தான் நான்நம்பி யுள்ளேன்
தலைகாலி என்றாலும், தலைவன்நா னன்றோ ?
நாதியிலாக் குடிமக்கள் நம்புகிறார் என்னை !
நடுக்கடலில் சிறுதுரும்பும் கப்பல்தா னன்றோ ?
ஆதிமுதல் இந்நாட்டை ஆண்டபரம் பரையில்
அழியாத களங்கம்நான் ! என்றாலும் என்ன ?

களங்கத்தைப் பார்த்தக்கால் காசெங்கு கிடைக்கும் ?
கண்ணியத்தை நினைத்தக்கால் 'கன'மெங்கு பிறக்கும் ?
விளங்காமல் சேலத்து மாநாட்டில் வந்து
வெண்தாடிப் பெரியாரின் பக்கத்தில் நின்று
முழங்கித்தென் தமிழ்நாட்டை முக்காட வைத்தேன்
மூன்றேநாள் ! பதவிக்கு முந்தானை போட்டேன் !
கலங்கிற்று தமிழ்நாடு ? அணுவேனும் இல்லை !
கடிவாளம் குதிரைக்கா, 'க'வுக்கா ? எனக்கேன் ?

கடலூரில் எனைஇன்றும் எதிர்ப்பார்கள் இல்லை !
கழகத்தார் உண்டென்றால் பெரியாரிங் குண்டு !
படுபாவி கோவிந்த சாமிஎன் பவனுல்
படும்பாடு அப்பப்பா ! அதுஒன்றே தொல்லை !
கிடக்கட்டும் ! வழக்குண்டு ! செயிலுண்டு ! பார்ப்போம்
கீழ்மேலாய் இழுக்காட்டித் துயர்காண வைப்பேன் !
நடக்கப்போம் பொதுத்தேர்தல் தனிஎன்னை எதிர்த்தால்
நானில்லை ! அவனுண்டு ! ஐயையோ ! ராமா !''

இப்படி ஓர்குரல் என்னை எழுப்ப
எழுந்தேன்; அங்கே இரண்டு விழியும்
சிவக்கச் சிவக்க 'டெக்னிக்' கலரில்
கடலூரார் நின்றார் கலங்கி.

—கதா

செப்பிளங் கொங்கைச் சேயிழை ஒருத்தி,
சோழன் நலங்கிள்ளித் தூயவன் ஆளும்
தலைநக ரத்தின் தரத்தினைக் காண
வந்தனள்; வந்த வழியில் தாமரை
மலர்கள் அழகாய் மலர்ந்த காட்சியும்
வண்டுகள் தேனை வாய்ப்புறங் கவ்வும்
இனிய காட்சியும் எழிலுறக் கண்டு
நகரத் துட்புறம் நடந்தனள்; அங்கு
உலாவருஞ் சோழன் உருவங் கண்டும்
வேலுங் கையும் விழியிற் கொண்டும்
வியந்தனள்; அந்த வியப்பில காதல்
மலர்ந்தது; உடலம் மலர்ச்சி யுற்றது.
மெய்சி லிர்த்தது; வியர்வை வழிந்தது
தேரிளம் பெண்ணாள் திரும்பினள் தம்மூர் !
மாலைக் காலம்; வண்ணக் குவளை
மலர்களை வண்டுகள் வந்து மொய்த்தன !
பாவை கண்கள் பாடம் படித்தன.
காலம் செல்லக் காவலன் ஓர்நாள்
நங்கை இருந்த நகரம் வந்து
சென்றனன்; அந்தச் செய்தியைக் கேட்ட
சேயிழை தன்நகர் சென்னி வளவன்
ஆளும் நகரென்(று) ஆனந் தித்தனள்
''வாடைக் காற்று இதுவரை வந்து
வருத்திற் றெனினும் வாரா தினிமேல் !
வேல்கைக் கொண்ட வென்றி வளவன்
காவலுக் கஞ்சிக் கலங்கிடும் வாடை !''
என்ன எண்ணி இன்புற் றிருந்தனள்
மாலை வந்தது; மயங்கினள் கன்னி !
இரவு படர்ந்தது; ஏங்கினள் எண்ணி !
தூக்க மின்றிச் சுருண்டு சுருண்டு
ஏக்கங் கொண்டு இப்படி அப்படி
மாறிப் படுத்தும் மனத்தினை மூட
வழியும் இல்லை; வாடினள் நங்கை !
அப்பொழு தேஒரு அழகிய தும்பி
பாவை உருளும் பள்ளிய றைக்குள்
மெல்ல நுழைந்து நல்லிசை மீட்டி
பறந்து பறந்து பாடிய(து) அதனைப்
பார்த்த பாவை பாட்டுக் குரலில்
''வளவன் அனுப்பிய வண்டே வருக !
செய்தி என்னவோ செப்புக !'' என்றனள் !
மாறுக் குரலில் மறுபடி வண்டு
பாடிய தும்அதைப் பதிலென எண்ணி,
''வளவன் வருவான்; மணமிகத் தருவான்
என்கின் றாயோ ! சரிசரி ! இன்று
வரட்டும்; காதல் வாசல் திறந்து
வரவேற் கின்றேன்'' என்றே வாயுற
வாழ்த்தினள்; அங்கு வந்த வாடையை
''ஓ ஓ ! வாடாய் ! ஓடுக ! சோழன்
வருவான் இங்கு ! வாளும் வேலும்
கொண்டவன் ! உன்னைக் கொன்றே விடுவான் !
என்பு துளைத்து, இளைத்த உடலை
துன்புறச் செய்யேல் ! தொலைக ! நகரை
முன்போல் நினையேல் ! மூளும் காவல்
நாளும் இந்த நகரினுக் குண்டு !
வண்டு வந்தது, வளவன் இங்கு
வருவான் என்னும் வார்த்தையைச் சொலவே !
வருமுன் னாலே மறைக !'' என்றனள் !
காதல் நங்கையின் கலவி மயக்கம்
தோன்றும் இந்தச் சுவைமிகு வெண்பா
முத்தொள் ளாயிரம் முழக்குவ தாகும் !
அது இது :
நாம நெடுவேல் நலங்கிள்ளி சோணாட்டுத்
தாமரையும் நீலமுந் தைவந்—தியாமத்து
வண்டொன்று வந்தது வாரல்—பனிவாடாய்
பண்டன்று பட்டினங் காப்பு.

முத் : 103.



# பாண்டிமாதேவி

★ கண்ணதாசன் ★

வானவில் வண்ணந் தோற்கும்
வடிவுடைப் பரிகள் யாவும்
மீனவர் அடிகள் தாங்கி
மெல்லியல் மடவார் போலத்
தானையின் முன்பால் வந்தே
தலைநிமிர்ந் தண்ணல் கொண்ட
தேனகக் கோட்டை புக்கும் ;
தெரிவையர் மலர்கள் தூவும் !

நாணியோ, நடுக்கத் தாலோ
நங்கையர்க் குவமை கூட்டும்
மாணெலாம் தானே கொள்ளும்
மயக்கிலோ கரிகள் யாவும்
வாணெடுங் கண்ணார் போல
மண்ணையே நோக்கிப், பாடும்
பாணருக் கடையா தான
பாட்டையுள் நடக்கும் மெல்ல !

பட்டத்துக் கரியின் மீது
பண்மொழி மாறன் தோன்ற
கிட்டத்து விழிகள் போட்டுக்
கிண்ணத்து அள்ளி நெஞ்ச
வட்டத்துள் போட்டுத் தோகை
வதனத்து மலரில் கொட்டி
தொட்டத்தாற் பெறுவ யாவும்
தோற்றத்தைக் கண்டே பெற்றாள் !

வெற்றிகொள் முழக்கி னோடும்
வேலிடைக் குருதி யோடும்
பற்றிய பரிகள் நீங்கி(ப்)
பறந்தனர் வீரர் ; மன்னன்
மற்றவர் மறையு முன்பே
மறைந்தனன் ; மாதின் நெஞ்சிற்
சுற்றிய இசையைத் தானும்
சுருதிபோற் சுற்றிக் கொள்வான் !

**வீடுதிரும்பிய வீரர்......**

— வேறு —

சின்னக் கண்கள் சிவப்பேற
சிதைந்து பூக்கள் இதழ்வாட(ப்)
பின்னிப் பின்னிச் சுகம்கூறும்
பேதாய் கதவம் திறவாயோ ?

இனிக்க இனிக்கக் கதைபேசி
இணைந்து கட்டிச் சுவைமேவி
மணக்க முத்தம் தருவாயே !
மாதே கதவம் திறவாயோ !
காலைப் பார்க்கும் கண்ணாளே !
ககனம் பார்க்கும் குழலாளே !
நூலை வெல்லும் இடையாளே !
நுகரக் கதவம் திறவாயோ !

முகத்தைக் கையால் மறைப்பாய்நீ
மூடும் கையைத் திறப்பேன் நான் !
அகத்தை ஆளும் மகராணி !
அதுபோற் கதவம் திறவாயோ !
பாதந் தூக்கிப் பட்டின்மேல்
பைய வைத்துப் போனாலும்
நாதந் தோன்றும் நடையாளே !
நலிந்தேன் கதவம் திறவாயோ !

**அரண்மனையில்......** — வேறு —

'' தூரத்திற் கண்ட போது
துள்ளினாள் ; அருகில் வந்தால்
ஓரத்தில் ஒதுங்கி நின்றே
ஒருவிழி சிறக்க ணித்து
சாரத்தில் கொஞ்சம் கொஞ்சம்
தருபவள் போலப் பார்த்து
நேரத்தைக் கழிக்கின் றாளே !
நினைவெலாம் எங்கோ !'' என்றே

பக்கத்தில் வந்தான் வேந்து ;
படிதலை பற்றித் தூக்கி,
''வெட்கமா ?'' என்றான் ; வேறு
என்னதான் விழியைச் சாய்க்கும் ?
மைக்கருங் கண்ணி தாளா
மயல்வழி கண்க ளாலே
முக்கர ணமும்உன் மேலே
மூண்டதன் விளைவாம் என்றாள் !

(தொடரும்)

# ஆவியவர் இல்லையடி !

அன்றைய இதழ் 'தென்றல்' தன் வாசகர்களுக்கு காதற் சுவை ததும்பும் வெண்பாக்கள் எழுதப் பணித்திருந்தது. அவர்களின் கற்பனை காட்டாறுபோல ஓடலாம், தடையேதும் கிடையாது என்றும் கூறியது அது.

அதற்கடுத்த இதழை ஆவலுடன் பிரித்தேன். அப்பப்பா ! காதற் பண்பை-விற்படையையும் வேற்படையையும் வென்றவனும் விழிவேற்படைக்கு வீழ்ச்சியுறும் செயலை - உண்ணென்று ஒருநாள் முழுதும் உணவு தந்தும் என் உயிர் நிலைபெற்றிருப்பதே என் தலைவனின் வண்ண வாயமுதால்தான் என்று கூறிடும் நிலையை-எத்தனையோ கோணங்களிலே படம் பிடித்திருந்தார்கள் எழுத்தாளர்கள்.

ஆனால் கயற்கண்ணிபுரத்தைச் சேர்ந்த சவ்வாது அவர்கள் அதிலும் ஒரு புது முறையைக் கையாண்டிருந்தார்.

அவள் சிந்தையும் செயலும் எப்பொழுதும் தன் அருமை அத்தானையே சுற்றிச் சுற்றித் திரிந்துகொண்டிருக்கும். எதைப் பார்த்தாலும் அந்த எழிலரசனின் எண்ணம்தான் அவளுக்கு. இதனாலேயே அவள் அன்று சரியாக ஏமாந்தாள்-இல்லை ஏமாற்றப்பட்டாள். எப்படி? அதை அவளே தன் தோழியிடம் கூறிக் குறைப்பட்டுக் கொள்கிறாள், கேளுங்கள்.

''அன்று நான் மட்டும் தனியாக நடந்துகொண்டிருந்தேன்; பின்புறமிருந்து யாரோ ஒருவர் என் மேலாடையைத் தொட்டிழுத்தார்கள். வேறு யாராக இருக்கமுடியும் ? அவர்தான் இந்த அதிகப்பிரசங்கி வேலையைச் செய்திருக்கவேண்டும். அவருக்குச் சரியான பாடம் கற்பிக்க எண்ணியது என் உள்ளம். உடனே ஊடல் கொண்டவள்போல் நடித்தேன் நான். ஆனால் சற்றுநேரம் கழித்துத் திரும்பிப் பார்த்தேன். அங்கே அவர் இல்லை ! ஆமாம். என் ஆடையைப் பற்றியிழுத்தது அந்த ஆணவம் பிடித்த தென்றல் தான் ! அதோடு நின்றதா அது? என் நிலையைக் கண்டு கைகொட்டியும் சிரித்ததடி அது!''-இப்படிக் குறைப்பட்டுக் கொள்கிறாள் அவள். இதோ ! அந்தப் பரிதாப மங்கையின் நிலையைக் கூறும் பாடல் !

**ஆடிவரும் தென்றலென் ஆடையினைத் தொட்டிழுக்க**
**கூடவரும் தோளென்று கோணிநின்(று)—ஊடினேன்**
**பாவியெனை அத்தென்றல் பார்த்துச் சிரித்ததுஎன்**
**ஆவியர் இல்லை அவண்.**

—கா. வேழவேந்தன்

★

# சூழ்ச்சிகளைத் தூளாக்குந் தோள் !

வெண்பாப் போட்டி 2ன் பரிசுபெற்ற கவிதை என் நெஞ்சைக் கவர்ந்தது. அதிலே அழகும், பொருளும், உயிர் வாழ்க்கையின் உன்னதமும் ஒழுங்கான முறையிலே சித்தரிக்கப்பட்டிருந்தது.

சின்னஞ்சிறு குழந்தை : பட்டுமேனி; பேசும் பூவிழி; பவளச் சிறுவாய்; மழலைத் தீங்குரல். ஆசையோடு குனிந்து நோக்கும் பெற்றோரின் அகங்குளிரச், சிறுகை நீட்டுகிறது. தாயும் தந்தையும் போட்டியிட்டுத் தூக்கியெடுத்து முத்த மழை பொழிகிறார்கள். அக்குழந்தையின் தோள், பெற்றோரைத் தீண்டி அவர்களுக்குப் பேரின்பமளிக்கிறது. இல்லறத்தை இனிப்பாக்குகிறது அக்குழவிச் செல்வம்.

அது வளருகிறது; நடக்கிறது; பேசுகிறது; ஓடுகிறது; பெற்றவர் உள்ளமெலாம் பூரிக்க, பல்கலை தேர்ந்து விருதும் பெறுகிறது அவ்வாண் பிள்ளை. முற்றாத இளமீசை. முறுக்கேறிய நன்னுடலம். வாலிபப்பருவம். கண்களிலே காதலொளி வீசுங் காலம். பருவத்திலே செய்யவேண்டிய திருமணத்தைப் பெற்றோரும் செய்துவைக்கின்றார்கள். வெளியுலகை மறந்து (அம்மகன்) வஞ்சியின் தோளணைந்து இரவையெலாம் இன்பவேலையாக்கிக்கொண்டு மயங்கிக் கிடக்கிறான். இதைக் காணும் பெற்றோர்கள் இயம்பவொண்ணா இன்பத்திலே ஊறுகிறார்கள்.

காலம் ஓடிக்கொண்டேயிருக்கிறது. எத்தனையோ இளவேனில்களும், கார்காலங்களும் வந்தோடி விடுகின்றன. இருவராயிருந்த கணவன்-மனைவியர் தங்கக்குழந்தைகளின் தாய் தந்தையர்களாகிறார்கள். அண்ணனும் தங்கையுமாக ஆடியோடி வந்து அன்னையின் மடிமீதும் தோளமீதும் தாவி வீழ்ந்து விளையாடுகின்றன. அந்த இளம்பெற்றோர்களின் மனம் குளிருகிறது. குழந்தைகள் பள்ளிக்குச் செல்கின்றன. அவைகளின் எதிர்கால வாழ்வுக்கு எத்தனையோ திட்டமிடுகிறார்கள் அப்பெற்றோர்கள். அந்தச் சமயத்திலே நாட்டுக்கே நலிவுதரும் போர் மூளுகிறது. தான் ''பிறந்த நாட்டுக்குப் பெருமை 'தேடிக் கொடுக்கும் திறம்' எனக்குண்டு'' என்று கூறியபடி பிள்ளைகளைப் பெற்றவன் போர்க்களம் புகுகிறான். அங்கே மாற்றாரின் சூழ்ச்சிகளைத் தூளாக்கி, வெற்றிக்கொடி நாட்டுகிறான்.

இவைகளையெல்லாம் மனக்கண்ணினால் கண்ட 'கயற்கண்ணிபுர'த்துக் கவிதையுள்ளம் ஒரு அழகிய வெண்பாவாக்கித் தந்துள்ளது.

தோழர் ச. இராமசாமி எழுதிய அந்த அழகிய வெண்பா இதோ :

**'' பிஞ்சுப் பருவத்தில் பெற்றோரைத் தீண்டிய தோள்**
**வஞ்சியரைத் தோயுந்தோள் வாலிபத்தில்-கொஞ்சுமக்கள்**
**மாட்சியுற ஆடுந்தோள் போர்க்களத்தில் மாற்றார்செய்**
**சூழ்ச்சிகளைத் தூளாக்குந் தோள்.''**

—க. பொழிலன்

## நூல் நயம்

### இலக்கிய காலம்

தமிழ் இலக்கியப் பரப்பு முழுவதையும் ஊன்றிக் கவனித்தால் காலத்தைப் பற்றிய ஆராய்ச்சி அதிகமாவதைக் காணலாம். மேலை நாட்டு இலக்கியங்களுக்கும் நமது தமிழக இலக்கியங்களுக்கும் உண்டான வேற்றுமை மிக அதிகம். அந்த நாட்டு இலக்கியங்களில், இலக்கியம் எழுந்த காலம்-இலக்கிய ஆசிரியர் வாழ்ந்த காலம் முதலியவை தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. நமது இலக்கியங்களில் அவை சரிவரக் குறிப்பிடப்படுவதில்லை: இதனால் அந்தந்த ஆசிரியர்கள் வாழ்ந்த காலமும், அந்தந்த இலக்கியங்கள் எழுந்த காலமும் ஆராய்ச்சியின் மூலம் கண்டுபிடிக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது.

ஓர் இலக்கிய ஆசிரியருடன் சமகாலத்தவர் என்று கருதப்படும் இன்னொருவர் இருந்தால் அவரைக் கொண்டு இலக்கிய ஆசிரியரின் காலம் ஆராய்ச்சி செய்யப்படுகிறது. அல்லது. வழக்கொழிந்த சில சொற்கள் முன்காளில் வழங்கிய காலத்தை யொட்டி ஆசிரியர்களின் காலம் வரையறுக்கப்படுகிறது.

இந்தக் கால ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்கள்—உண்மையிலேயே பாராட்டுதலுக்கு உரியவர்கள். ஆனால், ஒரு சிலர் 'ஆராய்ச்சி' என்ற பேரில் ஆகாதவற்றையெல்லாம் சொல்லி மறைந்தனர்.

இந்நூலை எழுதிய திரு. மு. கோவிந்தசாமி அவர்கள் உண்மையிலேயே ஆராய்ச்சியில் ஆவல் கொண்டு, காலத்தை ஆராய்ச்சி செய்திருக்கிறார். இவரது ஆராய்ச்சி தமிழ் இலக்கிய உலகுக்குப் பயன் தரத் தக்கதாகும்.

இந்நூலில், இலக்கிய ஆசிரியர்களைப் பற்றிய ஆராய்ச்சியும், காலத்தைப் பற்றிய ஆராய்ச்சியும், மதத்தைப் பற்றிய ஆராய்ச்சியும் இடம் பெற்றிருக்கின்றன. மன்னர்களைப் பற்றிய ஆராய்ச்சியைம் அவர்களது சமயத்தைப் பற்றிய ஆராய்ச்சியையும் தனித்தனி நூலாக எழுதுதல் சிறப்பளிக்கும் என்று கருதுகிறோம்.

தமிழ் இலக்கியங்களின் கால ஆராய்ச்சியை அறிந்துகொள்ள விரும்புவோருக்கு இந்நூல் ஒரு வழிகாட்டி. எல்லோரும் வாங்க வேண்டிய நூல்.

விலை ரூ. 1-12-0.

விற்பனை உரிமை: பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை - 1.

### அறிவுக் கடல்!

கார்ல் மார்க்ஸ் எழுதிய முதலீடு, ரூஸோ எழுதிய சமுதாய ஒப்பந்தம், லாஸ்கியின் பொது உடமைத் தத்துவம்—இத்தனையும் சேர்ந்த ஒரு சிறந்த தத்துவ விளக்கப் புத்தகம். ஒரு தனிப்பட்ட அரசியல் கட்சிக்காரர்கள் மட்டுமல்லாமல் எல்லாக் கட்சியினரும் ஏற்றுப் போற்றிப் பாதுகாத்துக்கொள்ள வேண்டிய அளவில் பன்மொழிப் புலவர் அவர்கள் இந்த நூலை எழுதியிருக்கிறார்கள்.

அரசாங்கம் என்றால் என்ன? அந்த அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் எப்படி ஒரு உடன்பாடு ஏற்பட்டது? என்பதை விளக்கியிருக்கும் இடத்திலும், லாஸ்கியின் பொது உடமைச் சித்தாந்தத்தின் ஆணிவேர் வரை, தனித்தனியாக அலசிக் காட்டும் இடத்திலும் நூலின் சிறப்பு உச்சத்திற்குப் போகிறது. தமிழுக்குப் பெருந் தொண்டாற்றிவரும் அப்பாதுரையாரின் இந்த அரசியல் விளக்க நூல் அவர் தமிழகத்திற்குப் படைத்த, குறிப்பிடத் தகுந்த நூல்களில் ஒன்றாகும்.

புத்தகத்தின் அமைப்பும், முகப்பும் எளியதாகவும், அழகாகவும் இருக்கிறது.

விலை ரூ. 2.

வெளியீட்டோர்: அருணோதயம், இராயப்பேட்டை சென்னை-14.

### வள்ளுவரும் குறளும்

திருக்குறள் உலக நூல்களில் உயர்ந்த நூல் என்பது உலகத்து அறிஞர்கள் பலராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒன்று. உலகத்து இலக்கியங்களில் பல, குறிப்பிட்ட நாட்டவர்களுக்கு எழுதப்பட்டவையாக இருக்கலாம். சான்றாக சிலப்பதிகாரமும், மணிமேகலையும் சிறந்த காப்பியங்கள் என்றாலும் அவை அவற்றின் ஆசிரியர்களால் தங்கள் இனத்துக்கு அதாவது தமிழ் இனத்துக்கு மட்டுமே எழுதப்பட்டவை என்று சில ஆராய்ச்சியாளர்களால் கருதப்படுகின்றன. ஆனால், குறள், தமிழ்மகன் ஒருவரால் உலகத்துக்கே எழுதப்பட்ட இலக்கியமாகும். அத்தகைய இலக்கிய நூலையும் அதை யாத்த வள்ளுவரையும் பற்றி திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் பேசிய சொற்பொழிவுதான் இந்த நூல்.

இந்நூலாசிரியர், உதாரணங்கள் தந்து வள்ளுவரின் குறளை விளக்கிச் செல்கிறார். 'வரலாறு' என்ற பேரால் வள்ளுவர்மேல் ஏற்றிவைக்கப்பட்டுள்ள கட்டுக்கதைகளைச்சாடுகிறார். வள்ளுவர் எச்சமயத்தாருக்கும் ஏற்றவரென்று சொல்கிறார். பரிமேலழகரின் உரை மாறுபட்டிருப்பதை எடுத்துக்காட்டுகிறார். இந்நூலைப் படிக்கும்போது இது ஒரு சொற்பொழிவு என்று எண்ணத் தோன்றவில்லை. ஆய்ந்து அமர்ந்து, எழுதிய ஆராய்ச்சி நூல்போலவே தோன்றுகிறது. அந்த அளவுக்குத் திறம்படப் பேசியுள்ள இதன் ஆசிரியர் பாராட்டுக்கு உரியவர். டாக்டர் மு. வ. அவர்களின் முன்னுரையும், ஔவை துரைசாமிப்பிள்ளை அவர்களின் அணிந்துரையும் இந்நூலை அழகு செய்கின்றன. நல்ல காகிதத்தில் அழகாகவும், குறைந்த விலையிலும் வெளியிட்டுள்ள பாரி நிலையத்தாரைப் பாராட்டுகிறோம்.

விலை ரூ. 1-0-0

வெளியீட்டோர்: பாரி நிலையம். 59. பிராட்வே, சென்னை-1.





## இரும்பும் தங்கமும்

அவசரமாக அந்த அறையில் நுழைந்த ஒற்றன், அரசனும் அழகியும் 'காதல் கட்டத்தில்' இருப்பதைக் கண்டு, ஒருகணம் செயலற்று நின்றான். பாசிபிடித்த தரையில் கால்வைத்து நடப்பவனைப் போல மெதுவாக ஓசைப்படாமல் நடந்துசென்று அறையைக் கடந்தான். நிலைமையை அமைச்சரிடம் கூறினான். இருவரும் என்ன செய்வதென்று யோசித்தனர்!

அரசனின் இன்பபுரிப் பயணம்' எப்போது முடியுமென்று சொல்ல முடியாது! அரசனிடம் சொல்ல வேண்டிய செய்தியோ, மிகமிக அவசரமானது!

மின்னல்போல் அமைச்சரின் மனதில் ஓர் எண்ணம் தோன்றியது! அவர் முகத்தில் புன்னகை அரும்பியது. அரசன் அணங்குடன் சுகித்திருக்கும் அறைக்குப் பக்கத்தில் அமைச்சரும் ஒற்றனும் வந்தனர்.

"இந்தச் செய்தியை என்னிடம் கூற உனக்கு இவ்வளவு நேரமா? இந்நேரம் பகைவரின் சேனை புறப்பட்டுவிட்டிருக்கும் என்கிறாய். நாம் நமது படை திரட்டிப் போருக்குப் புறப்படப் போதிய நேரமில்லாமல் செய்துவிட்டாயே, முட்டாள்!" என்று சினத்துடன் ஒற்றனைப் பார்த்துக் கேட்டார் அமைச்சர். அரசன் வெளியில் வரும் அரவம் கேட்டது. இருவரும் வாயைப் பொத்திக்கொண்டு சிரித்தனர்.

"காற்றினும் கடுகி வந்திருக்கிறேன் அந்தச் செய்தி என் காதில் விழுந்ததும்! இனி தாமதிக்காமல் போருக்கு ஆயத்தம் செய்தால், நமக்கே வெற்றி நிச்சயம்! இப்போதே அரசரிடம் செய்தியை..." ஒற்றன் முடிப்பதற்குள் பார்னபாஸ் வெளியில் வந்தான்.

"போரா? நம்மீதா? புரியவில்லையே! விளங்கச் சொல்லுங்கள்!" என்று தடுமாற்றத்துடன் கேட்டான்.

"ஸ்பார்ட்டா நாட்டு மன்னன் ஜெஸிலாஸ் தலைமையில், நமது படையை எதிர்க்க கிரேக்கர்கள் புறப்பட்டுவிட்டார்கள் அரசே! செய்தி தெரிந்ததும் ஓடோடியும் வந்தேன்!" என்று கூறிவிட்டு மூச்சுவிட்டான் ஒற்றன்!

"அப்படியா! அந்த ஆணவம் பிடித்த ஜெஸிலாஸின் கொட்டத்தை அடக்க நானேபோகிறேன்! பாரசீகரின் போராற்றலை அறியாமல், படை நடத்தி வருகிறானா அடையன்?" பார்னபாஸின் கண்களில் தீப்பொறி பறந்தது!

"அரசே! ஜெஸிலாஸை அடக்கத் தாங்கள் போகவேண்டுமா? நமது தளபதி போதாதா?"

"உண்மைதான் அமைச்சரே! ஆனால், நமது தகுதி தெரியாமல், நம்முடன் போரிடப் புறப்பட்டிருக்கும் புல்லனை நானே ஒறுத்து வர வேண்டுமென்று ஆவல்கொள்ளுகிறேன்."

"ஆம், ஆம்!" என்று தலையசைத்தார் அமைச்சர். பார்னபாஸ் பரிவாரங்களுடன் புறப்பட்டான் போருக்கு!

**2**

ஸ்பார்ட்டா, கிரேக்க நாட்டின் ஒரு பகுதி, அதை யாண்ட ஜெஸிலாஸ் பிறர் வாழப்பொருத புன்மதியாளர் குழுவைச்சேர்ந்தவனல்லன். வலிந்து எவரையும் போருக்கழைத்துப் பின்புறமுதுகிட்டோடும் வழக்கம் அவன் பரம்பரையில் யாருக்கும் கிடையாது.

அறிஞனும் ஆண்மையாளனுமான ஜெஸிலாஸை அரசனாகப் பெற்ற ஸ்பார்ட்டா நாட்டுக்கு குடிமக்கள், வாழ்விலும் இன்பத்தையே கண்டனர், சாவிலும் அதையே கண்டனர்! வாழ்ந்துகொண்டே உள்ளத்தைப் பொருத்த அளவில் அன்றாட செத்துக்கொண்டிருக்கும் கோழைகள், அந்நாட்டின் மூலை முடுக்கிலும் காணக் கிடைக்கமாட்டார்கள். "குடிதழுவிக் கோல் செலுத்திய மன்னனின் அடி தழுவி" அந்நாட்டு மக்கள் வாழ்ந்தனர்.

விழாவிற்கும் வைபவத்திற்கும் உறவுகொண்டு, அந்த உறவின் பயனை விளிந்தின்போது கண்டு, "நேசம் கொண்டோம் பிறநாட்டுடன் நாங்களும்!", என்று பேசித்திரியும் 'வல்லவர்கள்,' "தோழமை" என்னும் தூய சொல்லுக்கே புதிய பொருள் கொள்கிறார்கள்! ஆனால் ஜெஸிலாஸ், கடலுக்கு அப்பாலிருக்கும் தனது நேச நாட்டுடன், பாரசீக நாடு பொருத முனைந்தது என்றறிந்ததும், பிறநாட்டான் தன்னுடனேயே போரிட முன்வந்திருப்பதாகக் கருதினான்; உதவி கோரிய நண்பனுக்கு நல்ல பதிலைச்சொல்லியனுப்பினான்; படை திரட்டினான்; போருக்குக் கிளம்பினான்!

**3**

படைகள் மோதின!

கவசமணிந்து கேடயந் தாங்கிய ஜெஸிலாஸின் வீரர்கள், வரிசை குலையாமல், நின்று நிதானித்து, அச்சமும் அயர்வும் சிறிதுமின்றி எதிரிகளைத் தாக்கினர். பார்னபாஸின் வீரர்களும் சிறிதுநேரம் ஜெஸிலாஸின் படையை எதிர்த்தனர்!

நேரம் கழியக் கழியப் பாரசீகப் படை பின்வாங்கியது! புறங்காட்டவும் தொடங்கியது! வீரமுழக்கத்துடன் மேலும் மேலும் தாக்கினர், ஜெஸிலாஸின் வீரர்கள்! அவ்வப்போது தங்கள் தலைவன் தந்த ஊக்கம் புதிய பலத்தை அவர்களுக்குத் தந்தது!

பார்னபாஸின் விருப்பத்தை எதிர்பாராமல், படுதோல்வி அவனைத் தொட்டுத் தழுவிக்கொண்டது!

வேறு வழி ஏதுமின்றி, ஜெஸிலாஸிடம், பார்னபாஸ் சமாதான உடன்படிக்கைக்கு முன்வந்தான்! ஜெஸிலாஸ் மகிழ்ச்சியுடன் ஒப்புதல் தந்தான்! சமாதான உடன்படிக்கை நாளும் நேரமும் இடமும் குறிப்பிடப்பட்டது!

**4**

குறித்த நேரத்தில் அந்த இடத்திற்கு ஜெஸிலாஸும் அவனது வீரரும் வந்தனர். ஆனால் பார்னபாஸைக் காணவில்லை!.

ஜெஸிலாஸ் பசும் புற்றரையில் அமர்ந்தான். அவனைச் சுற்றிலும் வீரரனைவரும் அமர்ந்தனர். அது உணவருந்தும் நேரம்: ரொட்டியையும் வெங்காயத்தையும் புசித்தனர்! ஆம், ஜெஸிலாஸும்கூடத்தான் புசித்தான்!

மன்னனென்ற மமதை அணுவளவுமில்லாமல் - அமர்ந்திருக்க ஆசனமேதுமில்லாமல் - உடையிலும் மாற்றமேதுமில்லாமல் - வீரரோடு வீரனாகத் தானும் தரையில் அமர்ந்திருக்கும் ஜெஸிலாஸைப் போன்ற பண்பாளனை எந்த வீரன் தான் தலைவனாகக்கொள்ள விழையமாட்டான்?

எளிய உணவு! எளிய உடை! இயற்கைதந்த இருக்கைப்புல்தரை! எல்லோருக்கும் கிடைக்கக்கூடிய வசதிகள்! உண்மையான ஏழைப் பங்காளர்களும், நாட்டின் நலம் பேணும் நல்லவர்களும் இப்படி எளிய வாழ்வைத்தான் விரும்பி ஏற்பார்களோ!

★

ஜெஸிலாஸும் அவனது வீரரும் அமர்ந்திருந்த இடத்திற்குச் சற்றுத் தொலைவில், பார்னபாஸின் பணியாட்கள் ஒவ்வொருவராக வரத் தொடங்கினர்! முதலில் வந்தவன், விலையுயர்ந்த கம்பளங்களைக் கொண்டுவந்தான் - அவற்றைத் தரையில் பரப்பினான், "பார்னபாஸ் அமர்ந்து ஓய்வு பெறுவதற்காக! அடுத்து வந்த ஒரு கும்பல், ஒரு பெரிய கூடாரத்தை அமைத்தது, அரசனுக்கும் அவனது தளபதி, அமைச்சர் முதலானவர்களுக்கும் சூரிய வெப்பம் படாமலிருப்பதற்காக! அந்தக் கூடாரத்தைச் சுற்றிலும் பட்டுத்திரைச் சீலைகள் அழகாகத் தொங்கின!

கடைசியில் பார்னபாஸ் தோன்றினான்! அவன் அணிந்திருந்த நீளமான விலையுயர்ந்த அங்கி, அவன் மேனியெல்லாம் மறைந்திருந்தது! புயங்களில் பொற்கடகங்கள் அணிந்திருந்தான்! அவனைப் போலவே, அவன் அமர்ந்து வந்திருந்த அழகிய குதிரையும் அலங்கரிக்கப்பட்டிருந்தது!

சுருங்கச் சொன்னால், பாரசீகத்தின் அந்தப்புரமும் அரண்மனையும் அங்கு வந்துவிட்டிருந்தன!

பகலவனின் வெப்பம் மேனியெல்லாம் பட, தனக்கென ஓர் தகுதியான இருக்கையின்றித் தன் போர்வீரர்களுள் சமமாக வெறும் புல்தரையில் ஜெஸிலாஸ் அமர்ந்திருப்பதைப் பார்னபாஸ் கண்டான்! பொங்கிவரும் சிரிப்பை யடக்கப் பெருமுயற்சி எடுத்துக் கொண்டான். அப்படியும் சிரிப்பு அவனை மீறி வந்துவிட்டது!

மன்னன் சிரிக்கிறானே என்று ஒரு சிலரும், மன்னனருகில் அமர்ந்திருக்கும் மங்கையர் முத்துப்பற்கள் தெரிய முறுவலிக்கிறார்களே என்று இன்னும் சிலரும், ஏனோ சிரிக்கிறார்கள்-ஆனால் எல்லோரும் சிரிக்கிறார்கள்-நாமும் சிரிப்போம் என்று மற்றவர்களும், ஆக, ஒரே ஒருவனைத் தவிர, பார்னபாஸின் குழுவில் எல்லோரும் சிரித்தனர்! அரசனின் கண்கள் அவனைக்கண்டுவிட்டன!

அந்த வீரனைப் பார்னபாஸ் அருகில் அழைத்தான். மன்னனின் முகத்தில் மாறுதல் காணப்பட்டது! எல்லோரும் அந்த வீரனையே பார்த்தனர்!

சலனமற்ற முகத்துடன் வீரன் அரசனருகில் சென்றான்; வணங்கி நின்றான். அரசன் வினவினான்.

"அனைவரும் சிரிக்க, நீ மட்டும் ஏன் மௌனமாக அமர்ந்திருந்தாய்?"

"அரசே! அனைவரும் எதற்காகச் சிரித்தார்களென்றே எனக்குத் தெரியவில்லை. காரணம் விளங்காததால் சிரிப்பு வரவில்லை. அதனால் நான் சிரிக்கவில்லை!"

"நான் சிரித்ததால் மற்றவர்சிரித்தனர்!" என்றான் மன்னன்.

"நீங்கள் ஏன் சிரித்தீர்களோ!" என்றான் வீரன்.

"அதோ பார்! அந்தக் கூட்டத்தைப் பார்த்து நான் சிரித்தேன். நீ அதைக் காணவில்லை போலிருக்கிறது!" என்றான் அரசன். தம்மில் மாறுபட்ட - பாட்டாளி வர்க்கத்தினரைப் போன்று பார்ப்பதற்குக் காட்சியளித்த ஜெஸிலாஸின் கூட்டத்தைப் பார்த்து, இப்போதாவது வீரன் சிரிக்கத்தான் போகிறான் என்று பார்னபாஸ் எண்ணினான். அவன் எண்ணத்தில் இடிவிழுந்தது!

"அவர்களைப் பார்த்து ஏன் சிரிக்கவேண்டும்? சிரிக்கும்படியாக அவர்கள் என்ன செயலை மேற்கொண்டிருக்கின்றார்கள்?" என்று கேட்டான் வீரன். "இந்த தலைக்கனம்பிடித்தவனுக்கு என்ன கேடு சம்பவிக்கப் போகிறதோ!" என்று எல்லோரும் முணு முணுத்தார்கள். பார்னபாஸுக்கு என்ன பேசுவதென்று புரியவில்லை. சிறிதுநேரம் அங்கு அமைதி நிலவியது! வீரன் வாய்திறந்தான்.

"அரசே! என்னைத் தாங்கள் பேச அனுமதித்தால், என்கருத்தை அச்சமின்றி நான் வெளியிடுவேன்!" மௌனத்தோடு அரசன் தலையசைத்துச் சம்மதித்தான். வீரனின் வாய் மீண்டும் கலர்ந்தது!

"அரசே! நம்மிடம் தங்கமும், வைரமும், விலையுயர்ந்த அணிகளும், ஆபரணங்களும் தேவைக்கும் விஞ்சிய அளவு நான் காண்கிறேன்.

"முனை குலையாத கூர்மையான வாட்கள் நம்மிட மிருக்கின்றன; ஆனால் தினையளவு தோள்வலிமையும் மனவலிமையும் நம்மிடமில்லையே! அது பனையளவிற்கும் அதிகமாக ஜெஸிலாஸின் ஆட்களிடம் இருக்கின்றன!

அவர்கள் இரும்பு. நாம் தங்கம். ஆனால், போர்புரியும் ஆயுதங்களாக்க இரும்பல்லவா பயன்படுகிறது.

சீறியெழப் போகிறானே வீரனைப் பார்த்து மன்னன்—என்று எல்லோரும் எண்ணினார்கள்! ஆனால், சிறிதுநேர சிந்தனைக்குப் பிறகு பார்னபாஸ் எழுந்து தலைகுனிந்த வண்ணம், ஜெஸிலாஸ் அமர்ந்திருந்த இடம் நோக்கி நடந்து சென்றான்! கைகளிரண்டையும் நீட்டிப் பார்னபாஸை வரவேற்றான் ஜெஸிலாஸ்! இருவரும் புல்தரையில் அமர்ந்தனர்!

—முல்லைவழுதி.

One side of the page is dark

# இராசாதிராசன்

★ ★

இராசாதிராசன் உதவியால் குலசேகர பாண்டியன் பாண்டிநாட்டுக்கரசனாக முடிசூட்டப்பெற்றான். ஆனால், நாளடைவில், குலசேகர பாண்டியன், இராசாதிராசன் செய்த உதவியை மறந்து, தனக்கு எதிராகப் படைதிரட்டிய ஈழவேந்தனோடு தொடர்புகொள்ள ஆரம்பித்தான். இதையறிந்த இராசாதிராசன் ஈழத்தைத் தாக்கப் படை ஒன்றை அனுப்பினான். அந்தப் படைக்குத் தலைமை தாங்கியவர்கள், அம்மையப்பப் பல்லவராயர் என்ற சோழ அமைச்சரும் சீவல்லபன் என்ற போர்த்தலைவனுமாவர்.

சீவல்லபன்-ஈழநாட்டைச் சார்ந்தவன். ஈழமன்னன் பராக்கிரம பாகுவின் மகளான குயினியைக் காதலித்தவன். அவள் தந்தை ஒப்பாததால் அங்கிருந்து கிளம்பிச் சோழதேசம் வந்து,இராசாதிராசன் படையில் போர்த்தலைவனானவன்.

அவனும். அம்மையப்பரும் ஈழத்தின்மீது படையெடுத்து வெற்றிகொண்டார்கள். ஆனால் அங்கே குயினி இல்லையென்பதை அறிந்து சீவல்லபன் அரைமனதோடு.சோழ தேசம் திரும்பினான். சோழ மன்னன், சீவல்லபனுக்கென பாண்டியகுமாரியைக் கொண்டுவந்திருப்பதாகச் சொல்லுகிறார். அப்போது அந்தப் பாண்டியகுமாரியைக் காணவில்லை என்ற செய்தி இராசாதிராசனுக்கு எட்டுகிறது.-தோழி மூலம்!

பாண்டியன் மகளைக் காணவில்லை என்ற சேதி பொன்னி வளநாட்டின் பேர்பெற்ற புரவலனின் முகத்தைச் சிவக்கடித்தது. அவன் சோழமண்ணைப் பரிபாலிக்கும் உரிமைபெற்ற பிறகு அதுபோன்ற சம்பவம் அன்றுதான் நிகழ்ந்திருக்கிறது என்பதை எண்ணி எண்ணி நெக்குருகினான். நெஞ்சின் அலைகள் வேறு திசை நோக்கி அடிக்கும்போது மலர்ந்திருக்கும் நேத்திரங்கள்கூட ஒளி இழந்துவிடுகின்றன. வாளின் வலிமையால் வாகைசூடி வசீகரச் சிங்களத்தை வசப்படுத்திக் கொண்டு வெற்றி வீரர்களாய் வந்திருக்கும் அம்மையப்பரும், சீவல்லபனும் பக்கத்தில் நிற்பதைக் கூட மறந்துவிட்டான் புலிக்கொடியுடையான்.

“சோழனுக்கு இழுக்கு! சோழ வம்சத்திற்கே இழுக்கு! உண்டியல் சொத்தாக இருக்கவேண்டிய எதிரியின் மகள் எங்கோ மறைந்தாள் என்றால் இந்த நாட்டைக் கண்டிப்பார் இல்லாத கொண்டித்தொழு என்றல்லவா மற்றவர் நினைப்பர்? புவனம் முழுதும் புலிக்கொடி பறந்து தான் என்ன பயன்” என்று அடித்தொண்டையில் பேசிக்கொண்டே உள்ளே போனான் இராசாதிராசன். ஒன்றும் புரியாதவர்களாய் நின்ற இடத்திலேயே நின்றார்கள் அம்மையப்பரும் சீவல்லபனும்.

★

விலங்குகள் மலிந்த கானகம். சோழன் இராசாதிராசனின் உதவியால் வெற்றிக்கொடி நாட்டிய குலசேகரன் மதுரைச் சிங்காதனத்தைக் கைப்பற்றியதும் தப்பியோடிய பாண்டிய இளவரசன் – மீசையின் பூனைமயிர்ப் பருவம் மாறாத மிடுக்குள்ள வாலிபன் – களத்திலே மாண்டுபோன பராக்கிரம பாண்டியனின் குலச்செல்வன் வீரபாண்டியன், அந்தக் கானகத்திலேதான் வனவாசம் செய்துவந்தான். தன் சொல்லைத் தட்டிப்பேசும் சிற்றரசர்களின் மேன்மாடங்களை மண்மேடாக்கி, கூகையிருந்து கீழே சாய்ந்துகிடக்கும் பிணங்களுக்குத் தாலாட்டுப் பாட வைக்கும் பராக்கிரம பாண்டியனின் புதல்வன்தான் அவன். ஆனாலும் குடும்பத்துள் நடைபெற்ற குழப்பத்தால் கண்ணி, ரத்தம் மாறுவதற்கு மாற்றாரின் மண்ணிரத்தல் (கப்பம்) முறை தவறாது பெற்றுவந்த பாண்டியச் செம்மல் முடிவளர்த்து, மேனியை மூடியிருந்த ஆடைகள் நாற்றமடிக்க காடுமேடுகள் சுற்றினான். மேலூரை அடுத்த வெள்ளைமலைக் காட்டில் அவன் காலத்தை ஓட்டினான். காலையிலும் மாலையிலும் மலைமுகட்டிலிருந்து சிறப்புமிக்க மதுரை நகரைப் பார்ப்பான். எதிரிகளைச் சிரம் கவிழ்க்கவைத்த அவன் தீவிழிகளில் நீர்ததும்பி நிற்கும். தள்ளாடிக் கொண்டே மலைச் சரிவில் ஊர்ந்து வருவான். அப்போது, “வெள்ளி ஒளி வீசும் வெண்கொற்றக்குடையுடைய தென்னவன் தேசத்தில் சங்கினங்கள் ஈன்று போட்ட முதிரா முத்துக்களும், புன்னை அரும்புகளும், காவனம் செய்யும் கமுகமணிகளும் சிதறிக்கிடக்கும்” என்ற கருத்தைக் கொண்ட பாடல்களைக் கிராமத்து மகளிர் பாடிக்கொண்டு போவது வீரபாண்டியன் செவிகளில் மோதும். செல்வத்திருமகன் சித்தம் கலங்குவான், சரிவில் வளைந்து கிடக்கும் இளமரங்களில் சற்றுச் சாய்வான். பின், அந்தப் பாடல்கள் ஓய்ந்த பிறகு இறங்குவான். இப்படிப் பலநாள் அவன் “ரிஷி வாழ்க்கை”யை மேற்கொண்டிருந்தான்.

ஆடிமாதம் அப்போது. மதுரையை அடுத்த அழகர்கோயிலில் திருவிழா நடந்துகொண்டிருந்தது. மலையடிவாரத்தை வளைத்துக்கொண்டு போன வண்டிப்பாதையில் ‘ஜல் ஜல்’ என்று மணி கட்டி வண்டிகள் சங்கிலித் தொடர்போலப் போய்க்கொண்டிருந்தன. வண்டிகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு விளக்குகள் கட்டியிருந்தமையால், இரவு நேரத்தில் அந்தக் காட்சி வீரபாண்டியனுக்கு ரம்யமாக இருந்தது. வண்டியோட்டிகளின் நாடோடிப் பாடல்களில் மனதைப் பறிகொடுத்திருந்தான். வெகு நாழிகைக்குப் பிறகு அவன் தூங்கப்போனான். அதனால் மறுநாள்,சூரியன் உச்சிக்கு வரும் வேளையில்தான் அவனால் எழுந்திருக்க முடிந்தது. சில நேரங்களில் முதல் தொகையை வட்டி விழுங்கி விடுவதுபோல், கொஞ்சநேர உழைப்பை நெடுநேரத்து ஓய்வு விழுங்கிவிடுகிறது. மணி கட்டிய ஆடுகளும் மாடுகளும் மேய்வதற்காக மலைக்கு வந்த பிறகுதான் அவன் விழித்துப் பார்த்தான். அப்போது, அவனுக்குச் சற்று தூரத்திலிருந்த சுனையோரத்தில் ஓர் இளம்பெண் அயர்ந்து கிடந்தாள். பாட்டிமார் சொல்லும் கதைகளில் வரும் கதாநாயகனைப்போல, “பெண்ணே, உன்னைப் பார்த்தால் ராஜகுமாரிபோலத் தோன்றுகிறதே! யாது காரணம்?” என்று கேட்கவில்லை வீரபாண்டியன். காலை நேரத்துப் பனிரோஜா போன்ற எழில் மிகுந்த அந்த யுவதியைக் கைத்தாங்கலாகக் குடிசைக்கு இட்டுச்சென்றான் இளவரசன். அவள் முகத்திலே படிந்திருந்த களைப்பும், உள்ளத்திலே பின்னிக்கிடந்த கவலையும், வழக்கமான வாலிப உள்ளத்திலிருந்து அவனைப் பிரித்துவைத்தன. காதல் பிறக்க வேண்டிய நேரத்தில் இரக்கம் காட்டினான். ஆசை வார்த்தைகளைக் கொட்ட விரும்பும் வேளையில் களங்கமில்லாமல் பணிவிடை செய்தான். தாகத்தைத் தணிக்க இளநீரும், பசியைப் போக்கக் கனிவகைகளும் கொண்டுவந்து கொடுத்தான். யாரோ, வாழ்க்கையைத் துறந்த யோகி வலிய வந்து உதவி செய்கிறார் என்று அவள் நினைத்தாள். அரைகுறையாக வளர்ந்திருந்த தாடியும் அழுக்கேறிப் போன உடம்பும் அவளுக்கு அப்படித் தோற்றமளித்தன.

சூரியன் பழுத்துச் சிவப்பாகும் வரை அவள் எழுந்திருக்கவில்லை. விஷம் தீண்டியிருக்குமோ, விபத்து ஏதும் நேர்ந்திருக்குமோ என்றுபயப்பட்டான் வீரபாண்டியன். மெதுவாகத் தட்டி எழுப்பினான். விக்ரகம் விழி திறந்ததுபோல் கண்திறந்தாள் அவள். என்ன பேசுவதென்று வீரபாண்டியனுக்குத் தெரியவில்லை. அவள் ஏதாவது கேட்பாள் என்று அவன் எதிர்பார்த்தான். அவளும் ஒன்றும் பேசவில்லை. படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தாள். பயமும் வெட்கமும் பாவையின் முகத்திற்குக் கண்ணாடித்திரை போட்டிருந்தன. முழுமதி மேகத்துள் மறைந்துவிட்டது போலிருந்தது அவனுக்கு.ஆபத்தைக் கடக்கப் பேருதவி செய்தவர்களுக்கு அன்புள்ளம் காட்டி நன்றி சொல்லும் பெண் முகத்தின் மறைபொருளை எந்த ஆடவரும் புரிந்துகொள்வதில்லை. குழந்தையின் குமிழ் சிரிப்பையும், குமரியின் மோகனப் புன்னகையையும் ஒன்றாகக் கருதுபவர்கள் அவர்கள்.

அவளுடைய வெட்கத்திற்கு – நன்றி வழியும் கனிவுக்கு – வீரபாண்டியன் காதல் என்று ஈவு கட்டிக்கொண்டான். எழுந்து அவள் பக்கமாகப் போக எத்தனித்தான். அந்த நேரத்தில் அவன் எதிரே ஒரு வாள் வந்து பாய்ந்து நின்றது. சின்ன ஒலி கேட்டு சிறுத்தை அலட்சியமாகத் திரும்பிப் பார்ப்பதுபோல வீரபாண்டியன் வாள் வந்த திக்குப் பக்கமாகத் திரும்பினான். அவன் விழிகள் விரிந்தன! ‘சீவல்லபன்!’ என்று அவனை அறியாமலே முணுமுணுத்தது அவன் வாய். அந்தப் பெயர் கேட்டதும்,முகம் கவிழ்த்துக்கிடந்த அந்த ஓவியப்பாவை நிமிர்ந்து பார்த்தாள்......?

★

எதற்கும் கலங்காத இராசாதிராசன் – எதிர்ப்படை உட்புகுந்த போதும் கவலைப்படாத பேரரசன், பாண்டியன் மகள் ஓடிப்போய் விட்டாள் என்ற சேதி கேட்டு உக்கிப்போனான். அவன் முகத்திலே களை இல்லை; வீரமில்லை. சோகமே உருவாய் அவனது மாளிகையின் உட்புறத்தில் சுற்றிச் சுற்றி வந்தான். பரிமள வாழ்வில் படகோட்டி மகிழ்ந்த பேரரசு, ஒரு இரவு முழுதும் கண் மூடவில்லை என்றால் இராசாதிராசனை எவ்வளவு பெரிய சுமை அழுத்திக் கொண்டிருக்கவேண்டும்!

மறுநாட் காலை சூரியனின் இன்ப ஒளி ஒரு மகிழ்ச்சிகரமான தகவலைக் கொண்டுவந்தது.

வீரபாண்டியனைத் தேடிச்சென்ற சீவல்லபன், இரட்டை வெற்றியோடு வந்திருப்பதாகச் செய்தி கிடைத்தது சோழனுக்கு. ஈழத்திலிருந்து தப்பி வந்த குயினியும் வீரபாண்டியனோடு அகப்பட்டாள் என்ற சேதி சாதாரணமானதா?– எண்ணி எண்ணி மகிழ்ந்தான் இராசாதிராசன். “குலசேகரன் இருந்த இடத்திற்கு, பாவம், வீரபாண்டியன்! குயினியைக் காணாது தவித்தான் சீவல்லபன். அவனுக்கும் அவள் கிடைத்துவிட்டாள்” என்று இராசாதிராசன் பெருமிதங்கொண்டான்.

மாளிகைக் கதவு தட்டப்பட்டது. காவலன் கதவுகளைத் திறந்துவிட்டான். சீவல்லபனும் இன்னொரு வாலிபனும் உள்ளே வந்தார்கள்.

“வல்லபரே! வீரபாண்டியன் கிடைத்துவிட்டாரா? எங்கே அவர்? இவர்தானா?” என்று பக்கத்தில் நின்ற வாலிபனைக் காட்டிக் கேட்டான் இராசாதிராசன்.

“இல்லை; இதோ என் பக்கத்தில் நிற்பவள்தான் ஈழத்து ராணி” என்றான் சீவல்லபன்.

ஆண் உடையிலிருந்த குயினி இராசாதிராசனுக்கு மரியாதை செலுத்தும் வகையில் தலைப்பாகையைக் கழற்றினாள்.

இராசாதிராசனின் முகம் சிவந்தது. “வல்லபரே நீர் ஏமாந்து விட்டீர். குயினியல்ல இவள்! இவள்தான் பாண்டிய குமாரி! தப்பி ஓடியவள்!” என்று கடுகடுக்கப் பேசினார்.

“இல்லை பிரபு, நான்தான் குயினி. என் தந்தை என்னைத் தப்புவிப்பதற்காகக் குலசேகர பாண்டியன் பாதுகாப்புக்கு ஈழத்திலிருந்து அனுப்பி வைத்தார்” என்றாள்.

சீவல்லபனும், சோழனும் விந்தையில் மூழ்கினர். ஈழத்து இளவரசி வெட்கித் தலை குனிந்து நின்றாள்.

பேரும் புகழும் பெற்ற இராசாதிராசன் சீவல்லபனுக்கு வாழ்த்துக் கூறி ஈழநாட்டின் அரசனாக அனுப்பி வைத்தான். அதோடு மதுரைக்கு மன்னனானான் வாலிபன் வீரபாண்டியன்.

—தென்னரசு



## சோக காவியம்

— 2-ம் பக்கத் தொடர்ச்சி —

எல்லாமே இலக்கியத்திற்குக் கிடைத்த ஒளி முத்துக்கள்...!

“நீ என் இதய தாபத்தைப் பொங்கிப் புரளச் செய்வாய் என்பதை நான் எதிர்பார்த்தவனல்ல. இன்ப மயமான ஆசைவேகம் என்னைத் தணலாகத் தகிக்கிறது! அழகு மட்டும் உன்னிடம் இல்லாதிருந்தால் என் காதல் பிறந்திருக்குமோ, என்னவோ? உன் எழிலை நான் புகழாமலா இருக்கிறேன்? என் எல்லை மீறிய காதலின் ஆதாரமே உன் கவர்ச்சிதானே!...”

பானிபிரானி கீட்ஸின் வாழ்வில் வசந்தத்தை அழைத்து வந்தாள். அவன் ஆறுதல் பெற்றான்; அழகான கவிதை படைத்தான் மொழிக்கு புதிய ‘ஜீவத்’திளைப்பையே காணிக்கையாக்கினான்!

கீட்ஸ் எழுதுகிறான்;

“உயிரோடு கலந்துவிட்டவளே, ஆயிரம் இனிப்பு முத்தங்களை நீ எனக்கு ஆசையோடு கொடுத்திருக்கிறாய். அதற்காக நன்றி. ஆனால் ஆயிரத்திஒன்றாவது முத்தத்தை நீ தராதிருந்தால் என் மனம் என்ன பாடு படும் என்பதை நீ உணரவில்லை.”

காதலின் மகரந்தத் தூற்றலிலே ‘பருவங்கள்’ சிலிர்த்து உதிர்ந்தன. பழைய வாழ்க்கை; பழைய வேதனை; பழைய எண்ணங்கள்! கடன் தொல்லை வேறு. க்ஷயரோகம் கீட்ஸின் இதயத்தையே அரித்தது. கவிதை ததும்பும் அந்த நெஞ்சின் மகத்துவம் மனிதர்களுக்கே தெரியாதபோது நோய்ப் புழுக்கள் புரிந்துகொள்ளவா போகின்றன! பானிபிரானி, அந்தக் காதல்வல்லி கண்ணுக்கு எட்டாத தொலைவில் போய்விட்டாள்! சமூகத்திலே பரிதாபகரமான தோல்வியாகி விட்ட ஏழைக் கவிஞனிடம் இதயத்தைப் பறிகொடுத்து நிற்க அவளுக்குப் பைத்தியமா, என்ன? விருந்து கேளிக்கைகளிலும், நடன மண்டபங்களிலும் பல புதிய தோழர்கள் அவளுக்குக் கிடைத்தார்கள்.

இருமிக்கொண்டு படுக்கையிலேயே நாட்களைக் கழித்தான் கீட்ஸ். ரத்தத்துளிகள் தெறித்து விழுந்தன. கவிஞன் செத்துக் கொண்டிருந்தான்!

கீட்ஸ் அவளுக்கு எழுதினான்;

“இன்பங்களின் பூமிதப்பில் ஆனந்தமாய் வாழ்கிறாய் நீ. நிலைமை உன்னை மறக்கமுடியாதபடி செய்துவிட்டது. நீ இல்லாதபோது தென்றலைக்கூட நான் வெறுக்கிறேன். நான் வராத உலகத்தில் நீ சிரித்து வாழ்கிறாய்! காதலையோ, என்னுடைய உணர்ச்சிகளையோ இன்னும் நீ புரிந்துகொள்ளவில்லை. புதிய மாறுதல் தெரிகிறது உன்னிடம். நான் சாவை அழைக்கிறேன். காதல் விளையாட்டுப் பொருளல்ல. தெளிந்த மனமில்லாமல் நீ எனக்குக் கடிதமே எழுதவேண்டாம்.”

எத்தனையோ வாலிபர்களிடம் அவள் காதல் பொழிவதைக்கேட்டு, கீட்ஸ் குமுறினான். காதல் ஆபத்தானது என்பதை அவன் புரிந்துகொண்டான்! இன்பங்களின் அவைக் களத்தில் சோகத்தின் சிம்மாதனம் மறைந்து கிடப்பது கீட்ஸிற்கு அப்போதுதான் தெரிந்தது.

பானிபிரானின் அன்பிற்காக அவன் சுவையான கவிதை வரிகளை எழுதினான்.

“நீ உன்னை எனக்குக் கொடுத்துவிடு. எல்லாவற்றையும் எனக்கே உரிமையாக்கி விடு. அந்தச் சிலைமேனி, அதன் சிருங்காரம், அழியாத காதல், வெம்மையான தித்திப்பு முத்தங்கள், எழில் ததும்பும் மார்புக்குவடுகள், உன் உள்ளம், அன்பே எல்லாவற்றையும் எனக்கே அளித்துவிடு. சின்னஞ்சிறு அணுவைக்கூட என்னிடம் தராது மறைத்துவிடாதே!”

அந்த ‘இழந்த காதல்’ கீட்ஸின் வாழ்வை எரித்துக்கொண்டிருந்தது. ஆவேசம் கொதிக்க, துயரங்கள் புயலாக, உயிரின் மெல்லிய இழைகள் விடுபட்டுக்கொண்டிருந்தன. புண்பட்ட அவன் வெட்கத்தையும் மறந்து அவளுக்குத் திரும்பவும் எழுதினான்!

“நீ சிரித்து வாழும் இந்த மிருக உலகம் என்னைச் சாவின் பாதாளத்திலே அழுத்துகிறது. நான் மனிதர்களை வெறுக்கிறேன்; அதைவிட அதிகமாகப் பெண்களை வெறுக்கிறேன். மனிதப் பண்பிடம் நான் கொண்டிருக்கும் நம்பிக்கையை நீதான் காப்பாற்ற வேண்டும். என்னிடமே அதனை உருவாக்கிக் கொள்ள எனக்குத் திராணியில்லை. உலகமே மிருக வெறியால் ஆடுகிறது!”

வியாதியின் கொடுமை தணிய கீட்ஸ் இத்தாலி பயணமானான். நோபிள்ஸின் எழிற்காட்சிகளால் கவிஞனின் சாவை நிறுத்த முடியவில்லை. மூச்சுக்குழாய்கள் அறுபட, தொண்டை நரம்புகள் தூளாக, இதயம் சின்னாபின்னமாகச் சிதற, கீட்ஸ் இருமிக்கொண்டேயிருந்தான். கடைசியாக விரும்பாத காதலிக்கு பழைய முட்டாள்களின் பாணியில் அவன் எழுதினான்!

“விடை பெற்றுக்கொள்கிறேன். கடவுள் உன்னைக் காப்பாற்றட்டும்!”

தோழன் ஒருவனுக்கு எழுதிய கடிதத்தில் கீட்ஸ் குறிப்பிடுகிறான்:

“நண்பா, என்னுடைய உண்மையானவாழ்க்கை எப்போதோ முடிந்து விட்டது. சாவிற்குப் பிறகுள்ள வாழ்வாக இதனை எண்ணுகிறேன். உன்னிடம் இறுதிமொழி சொல்லக்கூட என்னிடம் துணிவில்லை. உன் முன்னால் நான் தலை தாழ்த்துகிறேன், அதுவும் அலட்சியமாக!”

கவிதை இலக்கியத்தில் துருவ நட்சத்திரமாகப் பிரகாசித்த அவன் பிணத்தை ரோமாபுரி கல்லறையிலே புதைத்தார்கள். கீட்ஸின் வாழ்க்கையே அரைகுறையாக நின்றுவிட்ட நிறைவு பெறாத ஒரு சோக காவியம்......



# சாவுக்குப்பின் சமத்துவம்?

தொட்டியில் வைத்த மாங்கன்று வளர்ந்து, கனிதரும் மரமாகிவிட்டது!

தெருவோரத்தில் விளையாடி வந்த சிறுவன், கல்லூரி செல்லும் காளையாகிவிட்டான்.

தீண்டாமை கூடாது எனச் சொல்லி அரசுரிமைபெற்ற காங்கிரசார் ஆட்சிக்கு வந்தும் பத்தாண்டு ஆகிவிட்டது.

இந்தப் பத்து ஆண்டுக் காலத்திலே காங்கிரஸ் சர்க்கார் சாதித்தவை என்ன? நாட்டுக்கும் மக்களுக்கும் நன்மைதரும் முறையில் அவர்கள் செய்தது என்ன? விரல் விட வகையில்லை.

சாதிப் பாகுபாடுகளை வேரறுத்துவிட்டதாக அவர்கள் சொல்லிப் பல ஆண்டுகள் ஆகிவிட்டன. தீண்டாமையை ஒழித்துவிட்டதாக எப்போதோ சொல்லிவிட்டார்கள். ஆனால் அந்த முறையைச் சுடுகாட்டிலும் ஒழிக்க இப்போதுதான் சட்டம் இயற்றப்போகிறார்களாம்!

நிலம் வாங்கும் ஒருவன்தான் வாங்கியவுடனேயே பட்டாவைத் தன் பேருக்கு மாற்றுவதுதான் முறை. சோம்பல் மிகுதியாலோ, கவனக்குறைவாலோ, திமிரினாலோ, தனக்கு மகன் பிறந்து அவன் வயது வந்தவனாக ஆகும் வரை பட்டாவைத் தன் பெயருக்கு மாற்றாமல் இருந்தால், அவனுக்குத்தான் சிக்கல் அதிகம். அதுபோலத்தான் தீண்டாமை முறையை நாட்டில் ஒழித்தவுடனேயே அதை மயானத்திலும் ஒழித்திருக்கவேண்டும் சர்க்கார். அதை விட்டு விட்டு, பத்து ஆண்டுகள் கழித்து தீண்டாமை முறையைச் சுடுகாட்டில் படிப்படியாக ஒழிக்க முயலுவது வேடிக்கைதான்! இரண்டு வயதுப் பாலகன் தள்ளாடி நடக்கிறான் என்றால் ஓரளவு ஒப்புக்கொள்ளலாம். பத்தாண்டுப் பையன் ஓர் அடி வைப்பதற்குள் பலமுறை விழுகிறான் என்றால் அது வேதனையாகவும் இருக்கிறது. அதற்குக் காரணம்? பையனின் உடலிலே வலுவில்லையா? பையனை வளர்க்க வகைதெரியவில்லையா?

காமராசரின் சர்க்கார் இந்த முதல் ரகத்தைச் சேர்ந்ததுதான். அரசாங்க நிலத்தில் உள்ள சுடுகாட்டில் ஆதிக்குடியினர்களின் பிணத்தை எரிக்கக்கூடாது என்று தடுப்பதைச் சட்ட விரோதம் என்று இப்போதுதான் அவரது சர்க்கார் முடிவுசெய்திருக்கிறது. பத்து ஆண்டுகள் கழித்து-நாட்டில் தீண்டாமையை ஒழித்துவிட்டோம் என்று கதறிய பிறகு - இப்போதுதான் அதைச் சுடுகாட்டிலும் ஒழிக்க வந்திருக்கிறார்கள்! கேவலம், பிணத்திற்கே சமத்துவம் பெற இவர்களால் முடியவில்லை.

ஒரு சில தனிச் சாதியாருக்கு தனிச் சுடுகாடு வேண்டுமென்றால் அந்தச் சாதியார் தங்கள் சொந்தச் செலவில் சுடுகாடு அமைத்துக்கொள்ளலாமாம்! இந்த விதி எதற்கு என்றுதான் நமக்குப் புரியவில்லை. நாட்டிலே சாதிமதம் இல்லை என்று சொல்வது! பின்னர் சுடுகாட்டிலே அதை அனுசரிப்பது! பத்தாண்டு கழித்து ஞானோதயம் பெற்றது போல் நடித்து, ஆதிக்குடிகளுக்குப் பொதுச் சுடுகாட்டில் பிரேதம் புதைக்க அனுமதிக்க முயற்சிப்பது! அத்துடன் சில தனிச் சாதியினருக்கு அவர்கள் இஷ்டம்போல தனியாகச் சுடுகாடு அமைத்துக்கொள்ள வழி விடுவது! இவையெல்லாம் துக்ளக் தர்பாரின் செயல்கள்.

சாதி மதம் இல்லை என்று முழங்கிய பிறகு எல்லா இனத்தவரையும் ஒரே சுடுகாட்டில் எரிப்பதற்குத் தடை என்ன இருக்கிறது? மேலும், சில சாதியார் தங்கள் செலவில் சுடுகாடு அமைத்துகொள்ள அனுமதித்தால் இந்த சர்க்காரை சாதிப் பாகுபாடற்ற சர்க்கார் என்று சொல்ல முடியுமா?

ஒரு அடி முன்னேக்கி எடுத்து வைத்தால் ஒன்பதடி பின்னேக்கி வழுக்கிவிழும் கோழைத்தன மிகுந்த சுதந்திர சர்க்காரைச் சரித்திரம் நேரு காலத்திலேதான் சந்தித்திருக்கிறது.

**பிணத்திற்குச் சமத்துவம்!**
**தனிச் சுடுகாட்டுக்கும் அனுமதி!**
**உலகம் சிரிக்கிறது! காமராசரே உலகம் சிரிக்கிறது!**

**—தமிழ்ப்பித்தன்**





மாடர்ன் தியேட்டர்ஸ்

# பாசவலை

டைரக்ஷன் A. S. நாகராஜன்

சங்கீதம் விஸ்வநாதன் - ராமமூர்த்தி

## கீழ்க்கண்ட ஊர்களில் விற்பனையாளர் 'தென்றல்'லுக்குத் தேவை

| | |
|---|---|
| அழகாபுரி | திருவண்ணாமலை |
| அம்பாசமுத்திரம் | பண்ருட்டி |
| அம்மாப்பேட்டை | கம்பம் |
| அம்மூர் | கொல்லங்கோம்பை |
| அயோத்யாபட்டினம் | நீடாமங்கலம் |
| அரகண்டநல்லூர் | பூலாங்கிணறு |
| அடியக்காமங்கலம் | மதகுபட்டி |
| ஆலங்குடி | கணியூர் |
| ஆனைக்காரன் சத்திரம் | திருப்பெரை |
| ஆனைமலை | எண்கண் |
| ஆய்க்குடி | வில்லியனூர் |
| ஆண்டிபட்டி | முகவூர் |
| திருவள்ளூர் | கமுதி |
| பாலூர்சத்திரம் | நல்லூர் |
| வாணியம்பாடி | திருப்பதி |
| வில்லுக்கிறி | முத்துக்கிருஷ்ணபுரம் |
| காவேரிப்பட்டினம் | மணக்குடி |
| தாராபுரம் | பக்காலா |
| குன்றத்தூர் | பாம்பன் |
| முக்கூடல் | போத்தனூர் |



ஆசிரியர், அச்சிடுபவர், வெளியிடுபவர் ... ஏ. எல். எஸ். அச்சகம், 2-127, மவுண்ட் ரோடு, சென்னை-6.

